# திருக்கோயில்கள் வழிகாட்டி

## தருமபுரி மாவட்டம்





தமிழ்நாடு அரசு
இந்து சமய அறநிலையத்துறை

# திருக்கோயில்கள் வழிகாட்டி



## தருமபுரி மாவட்ட
## திருக்கோயில்கள் வழிகாட்டி



தமிழ்நாடு அரசு
இந்து சமய அறநிலையத்துறை

| | | |
|---|---|---|
| முதற்பதிப்பு | : | ஆகஸ்ட் 2014 |
| முன் அட்டை | : | அருள்தரும் கல்யாண காமாட்சியம்மன்<br>அருள்மிகு மல்லிகார்ஜுன சுவாமி திருக்கோயில்,<br>கோட்டை, தருமபுரி. |
| பின் அட்டை | : | அருள்மிகு காலபைரவர் சுவாமி<br>அதியமான்கோட்டை, தருமபுரி. |
| உள் அட்டை | : | ஸ்ரீதேவி பூதேவி சமேத சென்றாயபெருமாள்<br>அருள்மிகு சென்றாய சுவாமி திருக்கோயில்,<br>அதியமான்கோட்டை, தருமபுரி |
| பக்கங்கள் | : | 180 (அட்டை, வரைபடம் உட்பட) |
| அச்சிடுவோர் | : | ஸ்ரீ கௌரி ஆப்செட் பிரிண்டர்ஸ், சேலம் |
| விலை | : | ₹ 110.00 |
| உரிமை | : | ஆணையர்,<br>இந்து சமய அறநிலையத்துறை<br>தமிழ்நாடு அரசு |

பூ.செந்தூர்பாண்டியன்
இந்து சமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்



தலைமைச்செயலகம்
சென்னை – 600 009.

## வாழ்த்துச் செய்தி

"முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்"

என்ற திருவள்ளுவரின் வார்த்தைகளுக்கு விளக்கமாய் உயர்ந்த இலட்சியப்பிடிப்போடும் தொலைநோக்கு சிந்தனையோடும் தமிழகத்தை முறை செய்து காத்துவரும் மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின் நல்லாசியோடு இந்நூலுக்கு வாழ்த்துச் செய்தியை வழங்குவதில் பெருமிதம் அடைகிறேன்.

தமிழர் பண்பாட்டில் தவிர்க்க முடியாத இடம்பெற்றுள்ள தமிழின் தனிப்பெரும் பெண்கவிஞரான அவ்வையாருக்கு சாதல் நீக்கும் அரிதான நெல்லிக்கனியை வழங்கிய செயலால் கடையேழு வள்ளல்களில் தலைசிறந்தவராகப் போற்றப்படும் மன்னர் அதியமான் ஆட்சி செய்த "தகடூர்" எனப்படும் தற்போதைய "தருமபுரி" மாவட்டத்தில் அமைந்துள்ள திருக்கோயில்களுக்குப் பக்தர்கள் புனிதப் பயணத்திற்கான வழிகாட்டியாக உருவாக்கப்பட்டுள்ள இந்நூல் மிகப்பயனுள்ளது என்பதில் ஐயமில்லை.

சிந்தனை உனக்குத் தந்தேன் திருவருள் எனக்குத் தந்தாய்,வந்தனை உனக்குத் தந்தேன் மலரடி எனக்குத் தந்தாய், பைந்துனர் உனக்குத் தந்தேன் பரகதி எனக்குத் தந்தாய், கந்தனைப் பயந்த நாதா கருவையில் இருக்கும் தேவே! - குட்டித் திருவாசகம் என்று போற்றப்படும் அதிவீரராமப்பாண்டியனின் பதிற்றுப் பத்தாந்தாதி பாடல் கருத்திற்கேற்ப, தமிழ் மக்களின், பண்பாடு, அரசியல், கலைகள், சமுதாயம், சமயம், அறங்கள் பற்றி அருஞ்செய்திகளைத் தாங்கி நிற்பவை தமிழகக் திருக்கோயில்களாகும்.

சாதாரண மனிதர்கள் தங்களின் அனைத்துத் துன்பங்களுக்கும் விடிவு தேடி இறைவனை நோக்கிப் பயணிக்கிறார்கள். இப்பயணத்தில் திருக்கோயில்கள் முக்கியப் பங்கு வகிக்கின்றன. அத்தகைய திருக்கோயில்களுக்கு வழிகாட்டும் வகையில் அமைக்கப்பட்டுள்ள இந்த மாவட்டத் திருக்கோயில்கள் கையேடு அனைவரும் பாதுகாத்து வைத்திருக்கவேண்டிய பொக்கிஷமாகும்.

இந்நூலை நேர்த்தியான முறையில் உருவாக்கம் செய்த அனைத்து நல்உள்ளங்களுக்கும் என் அன்பும், மனம்கனிந்த வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

P. [signature]

(பூ.செந்தூர் பாண்டியன்)

முனைவர். ரா.கண்ணன்.இ.ஆ.ப.,
அரசு கூடுதல் தலைமைச் செயலாளர்



சுற்றுலா, பண்பாடு மற்றும்
அறநிலையங்கள் துறை
தலைமைச்செயலகம்,
சென்னை – 600 009.
தொலைபேசி : 044 25670820

## வாழ்த்துரை

தமிழ்நாட்டில் உள்ள திருக்கோயில்களைப் பற்றிய வரலாறுகளை மாவட்ட வாரியாக எழுதி வெளியிடுவது காலத்தின் தேவையாக உள்ளது. இதனை ஆன்மீக அன்பர்கள் பெரிதும் எதிர்நோக்கியுள்ளனர். தமிழக நாகரிகம் திருக்கோயில் நாகரிகமே.

"கோவிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்"
"திருக்கோவிலில்லாத திருவிலூர்
..... ஊரல்ல அடவி காடே"

என்னும் கருத்தாழம் தமிழக மக்களிடையே அழுந்தி உள்ளது. வாழ்க்கை சூழல் மற்றும் காலவளர்ச்சியில் பல்வேறு சிக்கல்களை எதிர்கொள்ளத் துணியும்போது ஏற்படும் மனச்சலனங்கள் ஆன்மீகத் தேடல்களை அதிகரித்துள்ளன. பாடல் பெற்ற தலங்கள், பரிகாரத்தலங்கள், மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருக்கோயில்கள், இராசித்தலங்கள் என மக்கள் தங்களின் தேவைகளுக்கேற்ற திருத்தலங்களை நோக்கி பயணிக்கத் தொடங்கியுள்ளனர்.

ஒரு கோயிலைப் பார்க்கும்போது அதில் உள்ள கற்சிற்பங்கள், மரச்சிற்பங்கள் மற்றும் பண்டைய ஓவியங்கள் என அக்கோயிலின் தல வரலாற்றை எடுத்துரைக்க அங்கு எவரும் இலர். பல கோயில்களில் இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடல் புராணம் போன்ற காப்பியங்களில் வரும் புராண வரலாற்றுக்காலத்தில் இறைவன் நடத்திய திருவிளையாடல்கள் காட்சிப்படுத்தவதன் மூலம் எடுத்துரைக்கப் படுகின்றன. உதாரணமாக திருப்புடைமருதூர் இராஜகோபுரம் ஓவியங்கள், திருக்குற்றால சித்திரசபை ஓவியங்கள் போன்றவை. அதனால் அதிகாரப்பூர்வமாக வெளியிடப்படும் வழிகாட்டி நூல் செல்லும் கோயில்களைப் பற்றி அறிவதற்கு இன்றியமையாததாக இருக்கிறது.

மேலும் வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகள் குறிப்பாக இந்து மதத்தின்மீதும், இந்துவின் பண்டைய கலாச்சாரத்தை அறியவும், தங்கள் பயணத்திட்டங்களை வகுக்கவும் இவ்வழிகாட்டிநூல் நல்ல உறுதுணையாக அமையும்.

மாவட்டந்தோறும் இவ்வழிகாட்டி நூல்கள் இந்து சமய அறநிலையத்துறையினரால் வெளியிட்டமைக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள். எல்லா மாவட்டங்களையும் அடக்கிய மாநில அளவிலான ஒரு வழிகாட்டி நூலையும், மாவட்ட நூல்களைச் சுருக்கி வெளியிட வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டு வாழ்த்துகிறேன்.

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பது அவ்வை பிராட்டியாரின் நல்லுரையாகும். அறம் காத்த பண்டைத்தமிழ் மன்னர்கள் அற சின்னங்களாக ஆலயங்களை எழுப்பி தத்தம் இயல்பிற்கேற்றவாறு பொன்னும், பொருளும் வழங்கி அவைகளை பண்புக் களஞ்சியங்களாக உருவாக்கி வைத்துள்ளனர். அண்டை நாட்டார் வந்து வியந்து போற்றும் கவின்கலை சிற்பங்களையும், ஓவியக் கலைகளையும், ஒவ்வொருவரும் கண்டு பேருவகை கொள்ள வேண்டிய ஒன்றாகும். திருக்கோயிலின் தொன்மை கருதி மாவட்டந்தோறும் உள்ள திருக்கோயில்களுக்குச் சென்று கண்ணாரக் கண்டு நெஞ்சுருகி நின்று நினைந்தேத்தி வழிபட ஏதுவாக மாவட்டக் கையேடு தல வரலாற்றோடு வெளியிடுவது பக்தர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.

இக்கையேடு வெளியிடுவதற்கு தலவரலாறு முதல் அப்பகுதி திருக்கோயில்களின் தனிச்சிறப்புகள் வரை கொடுத்துதவி, மாவட்டந்தோறும் இந்நூல் வெளியிட உறுதுணை புரிந்த அத்துணை அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள்.

ரா கண்ணன்
28/03/2014

(முனைவர் ரா.கண்ணன்)

ப. தனபால், எம்.ஏ.,பி.எல்.,
ஆணையர்,
இந்து சமய அறநிலைத்துறை



119, உத்தமர் காந்தி சாலை,
நுங்கம்பாக்கம், சென்னை 600 034,
அலுவலகம் : 044 – 28334815
நிகரி : 044 –28334816
மின்னஞ்சல்: tn.endowments@tnhrce.org

## வாழ்த்துரை

அகில உலகங்களையும் ஆட்டுவிக்கும் இறைவனின் கருணை வெள்ளமே அனைத்து உயிர்களையும் உய்விக்கிறது. இவ்விறைவனின் கருணைக்குப் பாத்திரமாக அனைத்து உயிர்களும் வழிதேடி அலைகின்றன. யானையும், எறும்பும், சிலந்தியும் கூட இறைவனிடத்தில் பக்தி செலுத்தி முக்தி அடைந்துள்ளன. அரிதிலும் அரிதான மானிடப்பிறவி எடுத்த நாமும் இறைவனடியை நாடி அவன் தாளில் சேருவதே இப்பிறவியின் பயனாகும்.

''வேதமுதல் விண்ணோடு மண்ணுந்துதித்தாலும் ஓத
உளவா ஒரு தோழன் தொண்டருளன்''

ஆகிய இறைவனது பேரேது ? ஊரேது ? அவனை அடையும் வழி ஏது ? என்ற அறியாத சாமான்ய மக்களுக்கு இந்தப் புண்ணிய பூமியில் உதித்த பல்வேறு மகான்கள் நல்வழி காட்டிச் சென்றுள்ளார்கள். மிகவும் பாடுபட்டு அவர்கள் அடைந்த நல்வழியை நாம் எளிதாக அடைய அத்தகைய மகான்களின் எண்ணத்தில் உருவானவையே திருக்கோயில்கள். பக்தியுடன் வணங்கினால் பயன்தரும் வகையில் எண்ணற்ற திருக்கோயில்களை அமைத்தும் அவற்றில் வழிபடும் முறைகளையும் ஏற்படுத்தியுள்ளனர்.

இதனால் கடினமான பாதையில் சுகமாகப் பயணிப்பதைப் போல நாம் எளிதில் பயனடையலாம். அத்தகைய பயணத்தை மேலும் இனிமையாக்கும் வண்ணம் **மாண்புமிகு தமிழக முதல்வர் புரட்சித்தலைவி அம்மா** அவர்கள் இந்து சமய அறநிலையத்துறையினை மென்மேலும் மெருகேற்றி தமிழகத் திருக்கோயில்களைப் பாதுகாத்து அவற்றின் மேன்மையினை அனைவரும் உணர்ந்து பயன்பெறும் வண்ணம் பல்வேறு செயல்களில் ஈடுபட்டு வருகின்றார்கள். அந்த விதத்தில் பக்தர்களுக்குப் பயன்படும் வகையில்

மாவட்டந்தோறும் திருக்கோயில்களின் வழிகாட்டி கையேடு தயாரிக்க ஊக்கப்படுத்தி உள்ளார்கள். இதனால் பக்திநெறியில் சென்று பரமனடியை நாட முனைவோருக்குத் திருக்கோயில்களின் சிறப்பைத் தெரிந்து அவற்றின் பலனை நாட இக்கையேடு மிகவும் உறுதுணையாகத் திகழும்.

இந்த மாவட்டத் திருக்கோயில்கள் வழிகாட்டி நூல் வெளிவர உதவிய நல்உள்ளங்களுக்கு வாழ்த்து தெரிவித்து அனைவரும் இறையருளுடன் எல்லா வளங்களும் பெற்று வாழ வாழ்த்துகின்றேன்.

ப.தனபால்

(ப.தனபால்)

**கே. விவேகானந்தன்** இ.ஆ.ப.
மாவட்ட ஆட்சியர்



மாவட்ட ஆட்சியரகம்
தருமபுரி – **636 705.**

## வாழ்த்துரை

“ஆலயம் தொழுவது சாலவும் நன்று” என்பது ஆன்றவிந்து அடங்கிய ஆன்றோர் கூறிய அமுத மொழியாகும். அந்த அமுத மொழியை தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஆலய வழிபாடுகளை முறையாகச் செய்து மேன்மை பெற்றவர்கள் நம் முன்னோர்கள்.

மன்னவர்களும் அவர்களை அருள்வழியில் செலுத்திய இறையருள் பெற்ற முன்னவர்களும் இப்பெரு மக்களைப் பின்தொடர்ந்த பின்னவர்களும் பக்தியுடன் எழுப்பிய இறைமாளிகைகளே திருக்கோயில்களாக மிளிர்கின்றன; ஒளிர்கின்றன. நமது தமிழகத்தில் ஆயிரக்கணக்கில் திகழும் திருக்கோயில்கள் நம்பிக்கையின் சின்னங்கள்.

“நம்பினார் கெடுவதில்லை – இது
நான்கு மறை தீர்ப்பு
நல்லவர்க்கும் ஏழையர்க்கும்
ஆண்டவனே காப்பு”

என்னும் பாடல் வரிகள் திருக்கோயில்களின் மேன்மையைக் காட்டும் வைரவரிகள் ஆகும். சங்ககால வரலாற்று சிறப்புச் செய்திகளைப் பெற்றுள்ள தருமபுரி மாவட்டம் வரலாற்று சிறப்புமிக்க கோட்டை அருள்மிகு மல்லிகார்ஜுன சுவாமி திருக்கோயிலையும், அதியமான்கோட்டை அருள்மிகு சென்றாயபெருமாள் மற்றும் காலபைரவர் திருக்கோயில்களையும், தீர்த்தமலை அருள்மிகு தீர்த்தகிரீஸ்வரர் திருக்கோயிலையும் கொண்டுள்ளது மிகவும் சிறப்பானதாகும்.

தருமபுரி மாவட்டத்தில் உள்ள 1000க்கும் மேற்பட்ட பழம்பெரும் திருக்கோயிலைப் பக்தபெருமக்கள் தரிசித்து வருகின்றார்கள். **மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அம்மா** அவர்களின் ஆணைக்கிணங்க திருக்கோயில்களின் வரலாறுகளைப் பதிவு செய்து புத்தகமாக வெளியிடும் முயற்சியின் முதல்கட்டமாக "திருக்கோயில்கள் வழிகாட்டி" நூலை வெளியிடுவது சிறந்ததொரு ஆன்மீகப் பணியாகும்; அன்பர் பணியுமாகும்.

இந்நூல் சிறக்க நல்வாழ்த்துக்கள்....

மேலும் அனைத்து திருக்கோயில்கள் பற்றிய பெருமைகள் அடங்கிய பதிவுகளை பக்தபெருமக்களுக்கு ஒரே குடையின்கீழ் தெரிந்துகொள்ள ஏதுவாக ஒரு கோயில் சுற்றுலாமையம் அமைக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

இதற்கான வாழ்த்துக்களை வழங்க அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

(கே. விவேகானந்தன்)

# முகவுரை

"பாரத நாடு பழம் பெரும் நாடு
நீரதன் புதல்வர்; இந்நினைவகற்றாதீர்"

என்ற பாரதியின் கூற்றுக்கேற்ப நாட்டு மக்களிடையே நற்பண்புகளையும், மன ஒழுங்கினையும், அறக்கருத்தினையும், நேரிய வழிகளையும், ஆன்ம நேயச் சிந்தனையையும் ஏற்படுத்த அமைக்கப்பட்ட இறைவழிப்பாட்டுத் திருத்தலங்களே இன்றும் நம் பண்பாட்டையும் கலாச்சாரத்தையும் கட்டிக்காத்து, பேணி வருவதற்கு கருவியாய் திகழ்கின்றன என்றால் அது மிகையாகாது.

அத்தகைய திருக்கோயில்கள் நம் தமிழ்த் திருநாட்டில் எண்ணற்றனவாக அமைந்து அந்தந்த வட்டார வழக்கின்படியும் அவ்வப்போது அங்கு கோலோச்சிய மன்னர்களின் இறையுள்ளத்தின்படியும் அமைந்து இன்றளவும் நமக்கு அருளை வாரி வழங்கி வருகின்றன. புராண இதிகாச காலத்துக் கோயில்களை அவற்றின் பெருமை குன்றாது காலத்திற்கும் அவற்றின் பெருமை சிறக்கும்படி பல்வேறு மன்னர்கள் அரும்பணியாற்றிச் சென்றுள்ளனர். இவை பெரும்பாலும் அம்மன்னர்களின் தலைநகரிலேயே அமைந்துள்ளனவாக இருக்கும். நீர்வளம், நிலவளம் பொருந்திய பகுதிகளில் செல்வச்செழிப்புடன் இருப்பதால் அப்பகுதிகளில் பிரம்மாண்டமான திருக்கோயில்கள் அமைந்ததில் வியப்பில்லை.

தமிழ்நாட்டின் வடமேற்கில் எல்லைப்புற மாவட்டமாக அமைந்திருப்பது தருமபுரி மாவட்டமாகும். தருமபுரி மாவட்ட எல்லைகளாக கிழக்கில் திருவண்ணாமலை மற்றும் விழுப்புரம் மாவட்டமும், மேற்கில் கிருஷ்ணகிரி மாவட்டம் மற்றும் கர்நாடக மாநிலப் பகுதிகளும், வடக்கில் கிருஷ்ணகிரி மாவட்டம் தெற்கே சேலம் மாவட்டமும் உள்ளன. தருமபுரி இம்மாவட்டத்தின் தலை நகரமாகும். சங்ககாலம் முதல் தகடூர் என்று அழைக்கப்பட்ட தர்மபுரி 17 ஆம் நூற்றாண்டிலிருந்து தருமபுரி என அழைக்கப்பட்டு வருகின்றது. இந்தியா மற்றும் தமிழக வரலாற்றில் தருமபுரிக்குச் சிறப்பான இடம் உண்டு. தகடூர் என உச்சரிக்கப்படும் போதே உடன்

உச்சரிக்கப்படுவது சங்ககால வரலாற்றில் அதியர் மரபினரின் மிகச்சிறந்த மன்னரான அதியமான் நெடுமான்அஞ்சி ஆவார். இவர் தமிழர் பண்பாட்டில் தவிர்க்க முடியாத இடம் பெற்றுள்ள தமிழின் தனிப்பெரும் பெண்கவிஞரான அவ்வையாருக்கு சாதல் நீக்கும் கருநெல்லிக்கனியை வழங்கிய செயலால் கடையேழு வள்ளல்களுள் ஒருவராகப் போற்றப்படுகிறார்.

பக்தி இலக்கிய காலத்தில் தகடூர் நாட்டின் ஒரு சிவாலயம் வைப்புத்தலமாக பாடப்பட்டுள்ளது. தகடூர் நகரத்தில் சங்ககாலத்தின் இறுதியில் ஆட்சிப் புரிந்த சோழ மன்னர் பெயரில் அமைந்த கோச்செங்கணீஸ்வரர் கோயில் இன்று ஹரிஹரநாத சுவாமி திருக்கோயில் என அழைக்கப்படுவதை இத்திருக்கோயி–லில் உள்ள கல்வெட்டின் வாயிலாக அறியலாம்.

கோட்டைக்கோயில் என அழைக்கப்படும் காமாட்சியம்மன், மல்லிகார்ஜுன சுவாமி திருக்கோயில்கள் தமிழகத்தில் நுளம்பர்கலைப்பாணியில் அமையப்பெற்றுள்ள சிறப்பான கற்கோயிலாகும்.

இம்மாவட்ட மக்களிடையே தாய் தெய்வ வழிபாடும்; நாட்டுப்புற வழிபாட்டில் மாரியம்மன், செல்லியம்மன், அங்காளம்மன், படவேட்டம்மன் எனும் சக்தி வழிபாடும்; முனியப்பன், ஐயனாரப்பன் எனும் காவல் தெய்வ வழிபாடும்; வேடியப்பன், சிலைக்கல், வீரக்கல், தீப்பாச்சியம்மன் எனும் நடுகல் வழிபாடும் இருந்து வருகிறது.

பண்டைய காலத்தில் வடஇந்தியாவையும், தென்இந்தியாவையும் இணைத்த தட்சிணப்பெருவழி தகடூர் வழியே ஊடுருவி அமைந்திருந்தது. தட்சிணப்பெருவழி என்பது காஷ்மீரையும், கன்னியாகுமரியையும் இணைக்கும் இன்றைய தேசிய நெடுஞ்சாலை எண் 7 போன்று மிகவும் தொன்மையான காலத்தில் பயன்பாட்டிலிருந்த பெருவழிகளில் ஒன்றாகும்.

போரில் வெற்றி பெற அதியமான் மன்னர் காலபைரவருக்கு அமைத்தத் திருக்கோயில் தற்சமயம் அதியமான்கோட்டை அருள்மிகு காலபைரவர் திருக்கோயில் என மிகவும் புகழ்பெற்று விளங்குகிறது. மேலும் பக்தப்பிரகலாதனுக்கு நொடிப்பொழுதில்

அருள்புரிந்த நரசிம்மருக்கு தருமபுரி மாவட்டத்தில் பல்வேறு இடங்களில் புகழ்பெற்றத் திருக்கோயில்கள் அமைந்துள்ளன. அந்த வகையில் அளேபுரம் லட்சுமி நரசிம்மர், அளே தருமபுரி நரசிம்மர், உள்ளிட்ட நரசிம்மத்தலங்கள் பக்தர்களின் குல தெய்வமாகவும், பிரார்த்தனைத் தலங்களாகவும் திகழ்கிறது. மேலும் புகழ் பெற்ற சுற்றுலாத் தலமான ஒகேனக்கல் நீர்வீழ்ச்சிக்குச் செல்லும் பாதையில் புராதனச் சிறப்பு பெற்ற காவேரியம்மன் உடனுறை தேசநாதேஸ்வரர் திருக்கோயில் அமைந்துள்ளது.

மேலும் பெங்களூரு சேலம் புகைவண்டிப் பாதையில் அமைந்துள்ள புகழ் பெற்ற முத்தம்பட்டி ஆஞ்சநேயர் திருக்கோயில், காவல் தெய்வமான பி.அக்ரகாரம் முனியப்ப சுவாமி திருக்கோயில், அடர்ந்த வனப்பகுதியில் உள்ள நெருப்பூர் முத்தையன் திருக்கோயில், மகாசிவன்ராத்திரி விழா சிறப்பாக கொண்டாடப்படும் தருமபுரி அங்காளம்மன் திருக்கோயில் ஆகிய திருக்கோயில்களும் பிரசித்தி பெற்றவையாக விளங்குகின்றன.

அந்த வகையில் தருமபுரி மாவட்டத்தில் பல்வேறு சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டுள்ள திருக்கோயில்களைப் பற்றிய இவ்வழிகாட்டிக் கையேடானது பக்தர்களுக்கு மிகச் சிறப்பான முறையில் வழிகாட்டும் என உளமார நம்புகிறேன்.

**மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அம்மா** அவர்களின் ஆணைக்கிணங்க வெளியிடப்பட்டுள்ள இந்த மாவட்டத் திருக்கோயில்கள் வழிகாட்டி கையேட்டிற்கு வாழ்த்துரை வழங்கிய மாண்புமிகு இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் **பூ.செந்தூர்பாண்டியன்** அவர்களுக்கும், சுற்றுலா, பண்பாடு மற்றும் அறநிலையங்கள் துறை, அரசு கூடுதல் தலைமைச்செயலாளர் **முனைவர் திரு. ரா.கண்ணன், இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இந்த மாவட்டத் திருக்கோயில்கள் வழிகாட்டிக் கையேடு மிகவும் சிறப்பாக வெளியிடுவதற்கு எல்லா வகையிலும் ஆலோசனை வழங்கி ஊக்கப்படுத்திய இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் **திரு. ப.தனபால் எம்.ஏ., பி.எல்.,** அவர்களுக்கும் எனது மனமார்ந்த

நன்றிகளைத் தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் இந்த மாவட்டத் திருக்கோயில்கள் வழிகாட்டிக் கையேட்டிற்கு வாழ்த்துரை வழங்கிய தருமபுரி மாவட்ட ஆட்சித்தலைவர் **திரு. கே. விவேகானந்தன், இ.ஆ.ப.** அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த மாவட்டத் திருக்கோயில்கள் வழிகாட்டிக் கையேடு வெளிவர உதவிகள் புரிந்த தருமபுரி உதவி ஆணையர் திரு.செ.மாரிமுத்து அவர்களுக்கும் இம்மாவட்டத்தின் அனைத்து திருக்கோயில்களைப் பற்றியச் செய்திகளைத் தொகுத்து வழங்க உதவிய தருமபுரி நகர், அருள்மிகு சாலை விநாயகர் திருக்கோயில் செயல்அலுவலர் திருமதி. க. அமுதசுரபி அவர்களுக்கும், மற்றும் இவ்வழிகாட்டிக் கையேட்டிற்குத் திருக்கோயில்கள் பற்றியச் செய்திகள், புகைப்படங்கள் வழங்கிய அனைத்துத் திருக்கோயில்களின் செயல் அலுவலர்களுக்கும், சரக ஆய்வாளர்களுக்கும், திருக்கோயில் பணியாளர்களுக்கும் மற்றும் இப்புத்தகத்தைச் சிறப்பாக வடிவமைத்த ஸ்ரீ கௌரி ஆப்செட் பிரிண்டர்ஸ் உரிமையாளர் அரிமா K.S. சண்முகம் MJF அவர்களுக்கும், கணினி கோர்வையாளர் திருமதி. R. விமலா சீனிவாசன் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

கோ. செ. மங்கை

(கோ.செ.மங்கையர்க்கரசி)
இணை ஆணையர்

# தரிசன வாயில்



# அருள்மிகு சாலைவிநாயகர் திருக்கோயில்

தருமபுரி நகர்.

இறைவன் : அருள்மிகு சாலைவிநாயகர்

## தலச்சிறப்பு

இத்திருக்கோயில் மிகவும் பழமை வாய்ந்த திருக்கோயிலாகும். மிகவும் பிரசித்தி பெற்ற இத்திருக்கோயிலின் வழியே செல்லும் பயணிகள் அனைவரும் தங்கள் வாகனங்களை நிறுத்தி வாகனபூஜை செய்த பின்னரே பயணத்தைத் தொடருவர். அதேபோல் இப்பகுதி மக்கள் எந்த வாகனத்தை வாங்கினாலும் முதன் முதலில் இத்திருக்கோயிலுக்கு வந்து பூஜை செய்து செல்கின்றனர். புதிய திருமணத் தம்பதிகள் முதன் முதலில் இத்திருக்கோயிலுக்கு வந்து தரிசனம் செய்து செல்கின்றனர். அதேபோல் குழந்தை பிறந்த 15 நாட்கள் ஆன பிறகு, குழந்தையுடன் இத்திருக்கோயிலுக்கு வந்து சிறப்பு வழிபாடு செய்து செல்கின்றனர்.

## திருவிழாக்கள்

நவராத்திரி உற்சவம், மார்கழி மாத விடியற்காலை பூஜை மற்றும் விநாயகர்சதுர்த்தி உற்சவம் முதலியன சிறப்பாக நடைபெறுகின்றன. விநாயகர்சதுர்த்தி திருவிழா 15 நாட்கள் மிக விமரிசையாக நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை என
தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை **6.00** மணி முதல் – பகல் **12.00** மணி வரை

மாலை **5.00** மணி முதல் – இரவு **8.00** மணி வரை

## அமைவிடம்

இத்திருக்கோயில் தருமபுரியின் மையப்பகுதியில் அமைந்துள்ளது. தருமபுரி – சேலம் செல்லும் சாலையில் (பழைய சாலை) பழைய காவல் நிலையம் எதிரில் உள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்திருந்து 1 கி.மீ தொலைவில் உள்ளது. திருக்கோயிலுக்கு ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரி நகரில் தங்கும் வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு சாலைவிநாயகர் திருக்கோயில்,**

தருமபுரி நகர், தருமபுரி வட்டம் (ம) மாவட்டம் – **636 701**



**விநாயகர் சக்கரம்**

வலச்சுற்று விநாயகர் சக்கரம் படிப்படியாக நன்மைகள் செய்து கடைசி வரை நல்ல நிலையிலே வைத்திருக்கும்.







# அருள்மிகு பரவாசுதேவ சுவாமி திருக்கோயில்

கோட்டை, தருமபுரி.

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு பரவாசுதேவ சுவாமி |
| இறைவி | : அருள்தரும் வரமகாலட்சுமி தாயார் |
| தீர்த்தம் | : சனத்குமார நதி |
| தலவிருட்சம் | : ஆச்சா மரம் |
| ஆகமம் | : வைகானஸம் |

## புராணச்சிறப்பு

இத்திருக்கோயில் தருமபுரி நகர், கோட்டை, அருள்தரும் கல்யாண காமாட்சியம்மன் மற்றும் அருள்மிகு மல்லிகார்ஜுன சுவாமி திருக்கோயிலுக்கு வலப்புறம் அமைந்து சமய ஒற்றுமைக்கு எடுத்துக்காட்டாகத் திகழும் பழமையான திருக்கோயிலாகும். இத்திருக்கோயிலானது பிரம்மாவினால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாகவும், தேவர்கள், முனிவர்கள் மற்றும் பஞ்சபாண்டவர்களில் அர்ச்சுணன் முதலியோரால் வழிபட்டதாகவும் வரலாறு உள்ளது.

## தலச்சிறப்பு

திருவரங்கத்திலே அரங்கநாதன் சயனத் திருக்கோலத்திலும் திருமலையிலே ஸ்ரீனிவாசப்பெருமாள் நின்ற திருக்கோலத்திலும் காட்சியளிக்கின்றனர். புண்ணிய பூமியான தகடூரிலே பரவாசுதேவ பெருமாள் அமர்ந்தத் திருக்கோலத்தில் காட்சியளித்து பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறார்.

## தனிச்சிறப்பு

"சென்றால் குடையாய் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீளகடவுள் – என்றும்
புணையாம் மணி விளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாலுக்கு அரவு"

என்ற பொய்கையாழ்வரின் அருள்வாக்குப்படி இங்கு ஆதிசேஷன் ஏழு தலைகளுடன் குடையாகப் படமெடுத்த நிலையில் தனது நீண்ட உடலை மூன்று சுற்றுகளாக்கிக் கொண்டு சர்ப்பாசனமாக திகழும் நிலையில், அன்னையை இடது தொடையில் அமர்த்தியபடி பரவாசுதேவப்பெருமாள்,



சேவை சாதிக்கிறார். வலது பாதத்தினருகில் கருடாழ்வாரும் இடது பாதத்தினருகில் சிறிய திருவடியும் கரங்கூப்பி வணங்குகின்றனர். ஆதிசேஷன், பெருமாள், தாயார், பெரிய திருவடி(கருடாழ்வார்), சிறிய திருவடி (ஆஞ்சநேயர்), சிம்மாசன பீடம் ஆகிய அனைத்தும் ஒரே கல்லில் உருவாக்கி இருப்பது தனிச்சிறப்பாகும்.

## திருவிழாக்கள்

வைகாசி விசாகத்தன்று 10 நாட்கள் தேர்த் திருவிழாவும், வைகுண்ட ஏகாதசி சொர்க்கவாசல் திறப்பு விழாவும் மிகச்சிறப்பாக நடைபெறுகின்றன.

சித்திரை மாதப்பிறப்பு, வைகாசி விசாகத் தேர்த் திருவிழா, ஸ்ரீராமநவமி உற்சவம், புரட்டாசி சனிக்கிழமைகள், நவராத்திரி உற்சவம், வைகுண்ட ஏகாதசி சொர்க்க வாசல் திறப்பு மற்றும் மார்கழி மாத பஜனை நோன்பு விழா முதலியவை சிறப்பாக நடைபெறுகின்றன.



## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை என
தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை **6.30** மணி முதல் **11.30** மணி வரை |
| மாலை **5.30** மணி முதல் **8.30** மணி வரை |

## அமைவிடம்

இத்திருக்கோயில் தருமபுரி நகரின் கடைக்கோடியில் அமைந்துள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்திருந்து 1 கி.மீ தொலைவில் உள்ளது. திருக்கோயிலுக்கு பேருந்து நிலையத்திலிருந்து நடந்து வரலாம். ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரி நகரில் தங்கும் வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு பரவாசுதேவ சுவாமி திருக்கோயில்**

கோட்டை, தருமபுரி நகர், தருமபுரி வட்டம் (ம) மாவட்டம்.



### கருட தரிசனம்



கருடனைத் தரிசிக்கும் பொழுது கை கூப்பலாகாது. வலது கை மோதிர விரலினால் இருக்கன்னங்களையும் மூன்று முறைதொட்டுக் கொள்ள வேண்டும்.



## அருள்மிகு மல்லிகார்ஜுன சுவாமி திருக்கோயில்

கோட்டை, தருமபுரி.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு மல்லிகார்ஜுன சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் கல்யாண காமாட்சியம்மன் |
| தீர்த்தம் | : | சனத்குமார நதி தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வேளா மரம் |
| ஆகமம் | : | காமிகம் |

### தலச்சிறப்பு

இத்திருக்கோயில் 7, 8–ம் நூற்றாண்டை சேர்ந்த கர்நாடக நுளம்பப் பல்லவர்களால் கட்டப்பட்டது. அருள்மிகு மல்லிகார்ஜுன சுவாமி ஆலயத்தில் சிற்பத்தில் பெருமையுடைய அஷ்டதிக்கு பாலகர்கள் மற்றும் தொங்கும் தூண் உள்ளது. அம்மன் சன்னதி அஷ்டாதச கோணத்தில் 18 யானைகள் தாங்க 18–ம் படியுடன் அமைந்துள்ளது. சன்னதி சுற்றிலும் இராமாயணம் முதல் உத்திர இராமாயணம் வரை

பூமிக்கு மேல் ஒரு அடி உயரத்தில் நுண்ணிய சிற்ப வேலைபாடுகளுடன் உள்ளது. தமிழகத்தில் இவ்வகை சிற்பங்கள் இக்கோயிலில் மட்டுமே காண முடியும். இக்கலையுணர்வுள்ள சிற்பங்கள் காணுதற்கரிய கலைப் பெட்டகமாகும்.



இத்திருக்கோயில் ஒவ்வொரு அமாவாசையும் பெண்கள் பெருமளவில் கூடி அம்பிகையின் 18–ம் படியை பூஜை செய்து, கல்யாண காமாட்சியை தோளில் சுமந்து திருவலம் வரச் செய்கின்றனர். ப்ருங்கி மஹரிஷியின் வேண்டுகோள்படி சிவசக்தி ஐக்ய வடிவில் இறைவன் இறைவி திருக்காட்சிஅளித்ததால் அணைத்தெழுந்த நாதராக அம்பிகையை பிரதோஷத்தன்று வலம் வந்து திருக்காட்சி அளிப்பது இத்தலப் பெருமையாகும்.



மேலும் இத்திருத்தலத்தில் சூலினி ராஜதுர்க்காம்பிகை எருமை தலையும், மனித உடலும் கொண்டு கொம்பைப் பற்றி சூலத்தால் மகிஷாசூரனை வதம் செய்யும் திருக்காட்சியுடன் கிழக்கு நோக்கி அமைந்திருப்பது வேறு எந்த திருத்தலத்திலும் இல்லாத தனிச்சிறப்பாகும்.



குபேரபாகத்தில் அமைந்த சக்ர வடிவ யந்திர வடிவ பைரவர் புடைப்புச் சிற்பமாக அமைந்திருப்பது வேறு எங்கும் காண இயலாத அரிய காட்சியாகும்.

## தனிச்சிறப்பு

நான்கு யுகங்களிலும் நிலைத்திருந்த திருத்தலம் நரசிங்கப்பெருமான் – இராமபிரான் – தர்மர் – அர்ஜுணன் – துர்வாசர் – அகத்தியர் – ப்ருங்கி போன்ற முனிவர்களால் தவமிருந்து வழிபாடு செய்யப்பட்டத் திருத்தலமாகும்.

ப்ருங்கி முனிவருக்கு அன்னை திருவருள் புரிந்ததை ஒட்டியே உலகம் முழுவதும் கௌரி நோன்பு கடைபிடிக்கப்படுவது, இறைவனின் கருவறை அமைப்பைக் காட்டிலும் பல மடங்கு உயர்வாக அம்பிகையின் ஆலயம், விமானம் அமைக்கப்பட்டு சிறந்து விளங்குவது தாய் நாடு, தாய் மொழியைப் போல இத்திருத்தலம் தாய்க்கோவில் என பெருமையோடு பெண்ணின் பெருமையை உலகறியச் செய்வதில் முதலிடத்தில் உள்ளது.



கொடைவள்ளல் அதியமானிடம் சங்க காலத்தில் கிடைத்தற்கரிய

கருநெல்லிக்கனியை இத்தலத்தில் வாங்கி உண்டு அழியாப் புகழ் அடைந்த ஒளவையாரால் வழிபாடு செய்யப்பட்டத் திருத்தலம். சனத்குமார நதியைத் தீர்த்தமாக உடையது.



இத்திருக்கோயிலின் மகாமண்டபத்தில் மேற்கூரை விதானத்தில் வட்ட வடிவமான அமைப்பில் இடம் பெற்றுள்ள அஷ்டதிக்கு பாலகர்களின் உருவங்கள் நுணுக்கமான வேலைப்பாடுகளுடன் காணப்படுவது சிறப்பானதாகும். இதில் உள்ள எமதர்மராஜனுக்கு வழிபாடானது காஞ்சியில் சித்ரகுப்தனுக்கு வழிபாடு செய்யப்படுவது போல் இத்திருத்தலத்திலும் நடைபெறுகிறது.

## திருக்கோயிலில் உள்ள சன்னதிகள்

1. அருள்மிகு மல்லிகார்ஜுன சுவாமி சன்னதி
2. அருள்மிகு காமாட்சி அம்மன் சன்னதி
3. அருள்மிகு சித்தேஸ்வரர் சன்னதி
4. அருள்மிகு விநாயகர் சன்னதி
5. அருள்மிகு வள்ளி தேவசேனா சுப்ரமணிய சுவாமி சன்னதி
6. அருள்மிகு சூலினி ராஜதுர்க்காம்பிகை சன்னதி

## திருவிழாக்கள்



வைகாசி விசாகத்தில் திருத்தேர் பெருவிழா 10 நாட்களுக்கு நடைபெறுகிறது. ஆடி வெள்ளிக்கிழமை, ஆடிப்பூரம் மற்றும் நவராத்திரி, சிவராத்திரி, பங்குனி மாதம் வசந்த நவராத்திரி, கார்த்திகை சதயவிழா மற்றும் திருக்கல்யாணம் ஆகியன சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

சித்திரை மாதப்பிறப்பு, சித்ரா பௌர்ணமி, வைகாசி விசாகத் திருத்தேர்விழா, ஆனித்திருமஞ்சன உற்சவம், ஆடி வெள்ளிக்கிழமை, ஆடிப்பூரம், நவராத்திரி, அன்னாபிஷேகம், கார்த்திகை தீப உற்சவம், மார்கழி பஜனை விழா மகா சிவராத்திரி மற்றும் பங்குனி மாத வசந்த நவராத்திரி உற்சவம் முதலியவை சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.



## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை **6.30** மணி முதல் **12.30** மணி வரை |
| மாலை **4.30** மணி முதல் **8.30** மணி வரை |

## அமைவிடம்

இத்திருக்கோயில் தருமபுரி நகரின் கடைக்கோடியில் அமைந்துள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்திருந்து **1** கி.மீ தொலைவில் உள்ளது. திருக்கோயிலுக்கு பேருந்து நிலையத்திருந்து நடந்து வரலாம், ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரி நகரில் தங்கும் வசதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு மல்லிகார்ஜுன சுவாமி திருக்கோயில்,**

கோட்டை, தருமபுரி நகர், தருமபுரி வட்டம் (ம) மாவட்டம்–**636 702.**





## அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில்

குமாரசாமிப்பேட்டை, தருமபுரி.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் வள்ளி, அருள்தரும் தெய்வானை |
| தீர்த்தம் | : | சனத்குமார நதி தீர்த்தம் |
| தல விருட்சம் | : | வில்வ மரம் |
| ஆகமம் | : | குமார தந்திரம் |

### தலச்சிறப்பு

ஆதியில் சிவசுப்ரமணியர் திருக்கோயிலானது கருவறை, அர்த்த மண்டபம், முன் மண்டபம் மட்டுமே கொண்ட கற்றளியாக உருவாக்கப்பட்டு மயில் வாகனம், பலி பீடம் மற்றும் கொடி மரத்துடன் அமையப் பெற்றிருந்துள்ளது. நாளடைவில் செங்குந்த மரபினரால் படிப்படியாக புனரமைப்பு செய்யப்பட்டு தற்போது இத்திருக்கோயில் வளாகத்தினுள்

கொடிக் கம்பத்திற்கு முன்னால் வடபுறத்தில் நடராஜர் சன்னதியும், தென்புறம் சென்னகேசவப் பெருமாள் சன்னதியுடன் காணப்படுகிறது. இவ்விரு சன்னதிகளை இணைக்க மிகப் பெரிய மகா மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. சென்னகேசவப் பெருமாள் சன்னதியின் பின்புறம் துர்க்கை அம்மன் சன்னதி தனிக் கோயிலாக காணப்படுகிறது. இத்திருக்கோயினுள் திருச்சுற்றுப் பாதையின் வடக்கிழக்குப் பாதையில் நவக்கிரக சன்னதியும் இதனை அடுத்து யாகசாலையும் அமைக்கப்பட்டுள்ளது. இந்த யாகசாலையின் நேர் எதிரே இடும்பன் சன்னதி அமைக்கப்பட்டுள்ளது. திருக்கோயிலின் கிழக்கு வாசலில் 5 நிலை ராஜகோபுரமும், மேற்கு வாசலில் 3 நிலை ராஜகோபுரமும் திராவிட பாணியில் அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடன் காணப்படுகிறது.



ஆதியில் குமாரசாமிப்பேட்டையில் செங்குந்த மரபினர் காவடியை வைத்து வணங்கிய முதல் வழிபாட்டுத் தலமாகத் காவடிக் கோயில் திகழ்கிறது.

இத்திருக்கோயிலின் கிழக்குப் பாகத்தில் உள்ள திருக்குளத்திற்கு முன்பாக மயில் மண்டபம் ஒன்று காணப்படுகிறது. இத்திருக்கோயிலின் கிழக்குப் பாகத்தில் உள்ள நுழைவு வாயிலின் தெற்குப்புறம் அமைந்துள்ள மாரியம்மன்சுவாமி சுயம்பு மூர்த்தியாக விளங்கி அருள்பாலிக்கிறார். அதேபோல், வடக்குப் புறம் அமைந்துள்ள

பிள்ளையார் கோயில் இப்பகுதியின் எல்லைக்கோயிலாகத் திகழ்கிறது.

## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலில் ஐப்பசி மாதத்தில் நடைபெறும் கந்தர் சஷ்டி இலட்சார்ச்சனைப் பெருவிழாவின் போது, இத்திருக்கோயிலின் உபகோயிலான அருள்மிகு விநாயகர் திருக்கோயில் முன்பு சூரனை வதம் செய்யும் சூரசம்ஹார நிகழ்வுகள் வானவேடிக்கையுடன் நடைபெறுவது மிகவும் சிறப்பாகும்.

திருக்கோயிலில் உள்ள சன்னதிகள்:

1. அருள்மிகு சிவசுப்ரமணிய சன்னிதி
2. அருள்மிகு விநாயகர் சன்னதி
3. அருள்மிகு இடும்பன் சன்னதி
4. அருள்மிகு நவக்கிரக சன்னதி
5. அருள்மிகு நடராஜர் சன்னதி
6. அருள்மிகு சென்னகேசவப் பெருமாள் சன்னதி
7. அருள்மிகு துர்க்கை சன்னதி

## திருவிழாக்கள்

இத்திருக்கோயில் தை மாத பிரம்மோற்சவ திருவிழாவில் பெரிய ரதம் (அ) மகா ரதம் (அ) முருகர் ரதம் எனும் தேரினை திருவிழாவின் போது பெண்கள் மட்டுமே வடம் பிடித்து இழுத்து நிலைபெயர்க்கும் நிகழ்வு மிகவும் தனித்தன்மை வாய்ந்ததாகும். ரோகிணி நட்சத்திரத்தில் கொடியேற்றத்துடன் ஆரம்பித்து நடைபெறும் தைப்பூசத் தேர்த்திருவிழா மாவட்டத்தின் மிகப்பெரும் விழாவாகத் தொடர்ந்து 11 நாட்கள்

கொண்டாடப்படுகிறது. இத்திருவிழா நாட்களில் உற்சவர் புறப்பாடு நாள்தோறும் விதவிதமான வாகனத்தில் திருவீதி உலா வரும்.



மாதாந்திர கிருத்திகை, சஷ்டி, ஏகாதசி, சித்திரை மாதப்பிறப்பு, வைகாசி விசாகம், ஆனித்திருமஞ்சனம், விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, ஸ்ரீ ராம நவமி, ரதசப்தமி, ஐப்பசி அன்னாபிஷேகம், கந்தர் சஷ்டி இலட்ச்சர்ச்சனை, மகா சிவராத்திரி, ஆருத்ரா தரிசனம், திருவாதிரைத் திருநாள், கார்த்திகை தீபம், மார்கழி பஜனை வழிபாடு, வைகுண்ட ஏகாதசி, தைப்பூசத் தேர்த்திருவிழா மற்றும் பங்குனி உத்திரம் உற்சவம் முதயலின விஷேசமானவையாகும்.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி, உச்சிகாலம் மற்றும் சாயரட்சை என
தினமும் மூன்று கால பூஜை நடைபெறுகிறது

| | |
|---|---|
| காலை | **6.00** மணி முதல் **12.00** மணி வரை |
| மாலை | **5.00** மணி முதல் **8.30** மணி வரை |

## அன்னதானத் திட்டம்

இத்திருக்கோயிலில் மாண்புமிகு தமிழக முதல்வரின் அன்னதான திட்டம் மூலம் தினமும் 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

## அமைவிடம்

தருமபுரி பேருந்து நிலையத்திருந்து ஒகேனக்கல் செல்லும் சாலையில் ½ கி.மீ தொலைவில் அமைந்துள்ள குமாரசாமிப்பேட்டையின் நடுப்பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்திருந்து ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் விடுதிகள் வசதி உள்ளது.




**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில்,**

குமாரசாமிப்பேட்டை, தருமபுரி வட்டம் (ம) மாவட்டம்.–636 703.

அலுவலக தொலைபேசி: 04342–266616





## அருள்மிகு காலபைரவர் சுவாமி திருக்கோயில்

அதியமான்கோட்டை.

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு காலபைரவர் சுவாமி |
| தலவிருட்சம் | : வில்வம் |
| ஆகமம் | : காமிகம் |

### புராணச்சிறப்பு

அதியமான் மன்னனை அவரது எதிரியும் அரசனுமான இரும்பொறை தன் நயவஞ்சகத்தால் தோற்கடித்த போது அதியமான் மன்னரின் பெண்டிரும், பிள்ளைகளும் இந்தத் திருக்கோயிலில் அமைந்துள்ள சுரங்க வழிப்பாதையில் தப்பிச் சென்றதாக கர்ணபரம்பரைச் செய்திகள் கூறுகின்றன. சேக்கிழார் பெருமான் தனது பெரியபுராணத்தில் இந்த

காலபைரவர் சுவாமியை கீழ்க்கண்டவாறு அழைத்தும் புகழ்ந்தும் பாடியுள்ளார்.

"விடையவர் நாம் சித்தம் மகியு வயிரவராய்
குதிரைமலை நின்று அனைகின்றார்"

"பெரிய பயிரவ கோலப் பெருமான்"

## தலச்சிறப்பு



ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்து காலத்தால் அழியாப் புகழ்பெற்ற கடையேழு வள்ளல்களில் ஒருவரும் தகடூரைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சிபுரிந்தவருமான அதியமான் நெடுமான் அஞ்சியால் கட்டப்பெற்ற சுமார் 1200 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாகும் இத்திருக்கோயில். இந்தியாவிலேயே ஸ்ரீதட்சிணக்காசி காலபைரவருக்கு என்று தனித்திருத்தலம் இரண்டு இடங்களில் மட்டுமே உள்ளது. ஒன்று கங்கை நதிக்கரையில் அமைந்துள்ள காசி மற்றொன்று தருமபுரி மாவட்டம் அதியமான்கோட்டையில் அமைந்துள்ள இத்திருத்தலமாகும்.

இத்திருத்தலம் சங்ககால அதியமான் மன்னனின் ஆணைப்படி, வேத மகரிஷிகள் காசி சென்று, பூஜை செய்து இவ்விடத்திற்கு கருவறை சிலையை கொண்டு வந்து தென்திசையை நோக்கி அமைத்து "ஸ்ரீ தட்சிணக்காசி காலபைரவர்" என்று ஸ்தாபனம் செய்தார்கள்.

இத்திருக்கோயிலின் மகாமண்டபம் 9 நவகிரகக் கோள்கள் போல் பாவித்து அமைக்கப்பட்டுள்ளது. பைரவர்களில் 64 வகை உண்டு. இந்த 64 பைரவர்களும் ஒரே சொரூபமாக காட்சியளித்து "உன்மந்த பைரவராய்" இத்திருக்கோயிலின் கருவறைச் சிலை அமைந்துள்ளது.

கருவறையில் உள்ள மூலவரின் திருவுருவில் 12 ராசிகளும் 27 நட்சத்திரங்களும், 9 நவக்கிரக கோள்களும் அடக்கமாகும். எதிரிகளுக்குப் பயம் தந்து தன்னை அண்டியவர்களுக்கு அருள் செய்து படைத்தல், காத்தல், அழித்தல் எனும் முத்தொழில்களையும் செய்வதால் பைரவர் என அழைக்கப்படுகிறார். சிவனது அம்சமாகிய இவர் காவல் தெய்வமாகையால் காவல் குறியீடான நாயினை வாகனமாகக் கொண்டுள்ளார்.

**இத்திருக்கோயில் வளாகத்தினுள் தீர்த்தங்கரர் பார்சுவநாதர் சிற்பமானது மேற்கு நோக்கி பார்த்தவாறு உயர்ந்த மேடை ஒன்றின் மேல் காணப்படுகிறது.**

## தனிச்சிறப்பு

பொதுவாக சிவாலயங்களில் காலபைரவர் சன்னதியானது ஈசானிய பாகத்தில் அமைந்திருப்பது வழக்கம். ஆனால் இத்திருத்தலத்தில் காலபைரவர் சுவாமி தனிப்பெரும் கோயிலாகக் கொண்டு விளங்குகிறார். இத்திருக்கோயில் கற்றளி வகை திருக்கோயிலாகும். இத்திருக்கோயிலைச் சுற்றி போர்க்கால காட்சிகளும், இறை உருவங்களும் சிற்பங்களாக அமைந்துள்ளன.

இத்திருத்தலத்தில் அமைந்திருக்கும் காலபைரவர் சிலையின் வடிவமைப்பு மகத்தானது. அவரின் தலையிலே அக்னிப்பிழம்பினைத் தாங்கி, காதுகளில் குண்டலத்துடனும், கழுத்தினிலே கபாலமாலையுடனும், பூநூல் அணிந்தும்,



அரைஞாண் கயிறாய்ப் பாம்பினை முடிந்தும், கால்களிலே சலங்கையினைக் கொண்டும் காட்சியளிக்கிறார். மேலும் தன் நான்கு கரங்களில் வலது மேற்கரத்தில் உடுக்கையும், கீழ்கரத்தில் திரிசூலத்துடனும் இடது மேற்கரத்தில் பாசங்குசமும், கீழ் கரத்தில் கபாலமும் ஏந்தியுள்ளார். மேலும் பத்மபீடம் என்று சொல்லக்கூடிய தாமரைப்பீடத்தில் அசுர சோனவாகனம் என்று சொல்லக்கூடிய நாய் வாகனத்தில் நின்ற கோலத்துடன் நிர்வாணமாக காட்சியளிக்கிறார்.

இத்தகைய பெருமை வாய்ந்த இத்திருக்கோயிலில் தீபம் ஏற்றி தீபவழிபாடு செய்வதால் **9** நவக்கிரக தோஷங்கள் விலகுவதுடன் மும்மூர்த்திகளின் அருளும் பரிபூரணமாக கிடைக்கிறது. எடுத்த காரியத்தில் வெற்றி உண்டாகிறது. குழந்தை இல்லாதவர்களுக்கு குழந்தை பாக்கியம் உண்டாகிறது. வறுமை நீங்குகிறது. சனீஸ்வரர் பகவானால் ஏற்படும் துன்பம், தொல்லைகள் நீங்குகின்றன. பில்லி, சூனியம் மறைகின்றன. வழக்குகளில் வெற்றி கிடைக்கிறது. வியாபாரத்தில் இலாபம் கிடைக்கிறது. காலச்சக்கரத்தினை இயக்கும் பரம்பொருளே காலபைரவர். காலத்தின் கட்டுப்பாட்டை நீக்கி நன்மை செய்பவர் காலபைரவர். காலச்சக்கரத்தினால் துன்பமடையும் பக்தர்களை காப்பாற்றுபவரும் இவரே ஆவார்.

## திருவிழாக்கள்

சித்ரா பௌர்ணமி பிரம்மோற்சவத் திருவிழா 10 நாட்கள் மிகச்சிறப்பாக கொண்டாடப்படுகிறது. கார்த்திகை மாத காலாஷ்டமி உற்சவம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

நாள்தோறும் இராகுகாலத்தில் சிறப்புப் பூஜைகள் நடைபெறுகின்றது.ஞாயிற்றுக்கிழமை இராகுகாலப் பூஜையில் பங்கேற்பது சிறப்பானதாகும். மாதாந்திர அமாவாசை உற்சவம், பௌர்ணமி உற்சவம் மற்றும் வளர்பிறை அஷ்டமி உற்சவம் ஆகியன சிறப்பாக நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| | |
|---|---|
| காலை 7.00 மணி முதல் 12.00 மணி வரை |
| மாலை 4.00 மணி முதல் 8.00 மணி வரை |



## அன்னதானத் திட்டம்

இத்திருக்கோயிலில் மாண்புமிகு தமிழக முதல்வரின் அன்னதானத்திட்டம் மூலம் தினமும் **50** நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

## அமைவிடம்

தருமபுரியிருந்து சேலம் செல்லும் நெடுஞ்சாலையில் **8** கி.மீ தொலைவில் உள்ள அதியமான்கோட்டையில் சாலையை ஒட்டியே இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிலிருந்து பேருந்து மற்றும் ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் வசதி உள்ளது.


**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு காலபைரவர் சுவாமி திருக்கோயில்**

அதியமான்கோட்டை, தருமபுரி வட்டம்,
தருமபுரி மாவட்டம். – **636 807.**




## தீபங்கள் பதினாறு



| | |
|---|---|
| 1. தூபம் | 9. கஜ தீபம் |
| 2. தீபம் | 10. வியாக்ர (புலி) தீபம் |
| 3. அலங்கார தீபம் | 11. சிம்ஹ தீபம் |
| 4. நாக தீபம் | 12. துவஜ (கொடி) தீபம் |
| 5. விருஷப தீபம் | 13. மயூர (மயில்) தீபம் |
| 6. புருஷாமிருக தீபம் | 14. பூரண கும்ப (ஐந்து தட்டு) தீபம் |
| 7. சூல தீபம் | 15. நட்சத்திர தீபம் |
| 8. கமடதி (ஆமை) தீபம் | 16. மேருதீபம் |



# அருள்மிகு சென்றாய சுவாமி திருக்கோயில்

அதியமான்கோட்டை.

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு சென்றாய சுவாமி |
| இறைவி | : அருள்தரும் ஸ்ரீதேவி, அருள்தரும் பூதேவி |
| தலவிருட்சம் | : காட்டுநெல்லி |
| ஆகமம் | : பாஞ்சராத்ரம் |

## தலச்சிறப்பு

இத்திருக்கோயில் எழுந்தருளியுள்ள சென்றாயப் பெருமாள், சென்றாய சுவாமி என அழைக்கப்படுகிறார். நீண்ட சதுரமாகிய நிலப்பரப்பில் மேற்குப் பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. கோயிலைச் சுற்றிலும் அகண்ட இடம் உள்ளது. அதன் வெளியில் குட்டையான வலிமை வாய்ந்த மதில் சுவர்கள் கருங்கற்களால் எல்லையைக் குறிக்க அமைக்கப்பட்டுள்ளது. கோயிலின் கருவறை மிக உயர்ந்த

இடத்தில் அமைந்து அழகான முறைப்படி அமைக்கப்பெற்றத் திருக்கோபுரத்தை உடையதாய் உள்ளது. கோயிலின் அடித்தளம் கருங்கற்களால் ஆனது.



கருவறையில் ஸ்ரீதேவி, பூதேவி சமேதராக சென்றாயப் பெருமாள் விடுகாதழகராக நின்ற கோலத்தோடு காட்சி தருகின்றார். பெருமாலின் சிலை 3 அடி உயரம் உடையது. அதற்கேற்ற உடல் கூறுகளின்படி சிலை அமைக்கப்பெற்று தோள்அணி, கைஅணி, காலணிகளுடன், உயர்நத கிரீடத்துடன் காட்சியளிக்கின்றார். அத்துடன் தலையில் உள்ள கிரீடத்துக்குக் கீழே பெருமாளின் தோள்களிலும் முதுகிலும் கருண்டு சுருண்டு தொங்கும் கேசத்துடன் (முடியுடன்) இருப்பதால் இப்பெருமான் சென்ன கேசவப் பெருமாள் என்றும் அழைக்கப்படுகிறார்.

கருவறையை ஒட்டியதாக அர்த்த மண்டபம் அமைந்துள்ளது. அதில் ஆழ்வார்கள் சிலைகள் உள்ளன. அதனை ஒட்டி மகா மண்டபம் 10 தூண்கள் 4 வரிசையாக அமைந்த நிலையில் நல்ல கற்கூரை மண்டபத்துடன் அமைந்துள்ளது.

## தனிச்சிறப்பு

இத்திருக்கோயில் கற்களால் கட்டப்பட்டதும் 1200 ஆண்டுகள் பழமையானதுமான திருக்கோயிலாகும். இத்திருக்கோயில் அர்த்தமண்டப மேற்கூரைப் பகுதியில் இராமாயண மற்றும் மகாபாரத ஓவியங்கள் ஹொய்சாள



மன்னர்கள் காலத்து மூலிகை வண்ணங்களால் வரையப்பட்டுள்ளது கண்கொள்ளாக் காட்சியாகத் திகழ்கிறது. மத்திய தொல்லியல் துறையால் இத்திருக்கோயில் பாதுகாக்கப்பட்ட புராதனச்சின்னமாக அறிவிக்கப்பட்டு பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

## திருவிழாக்கள்

சித்ரா பௌர்ணமி பிரமோற்சவத் திருவிழா 10 நாட்கள் மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. புரட்டாசி சனிக்கிழமைகளில் உற்சவம், வைகுண்ட ஏகாதசி உற்சவம், நவராத்திரி உற்சவம், தனுர் மாத உற்சவம், மாதாந்திர பௌர்ணமி உற்சவம் மற்றும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் நடைபெற்று வருகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் உச்சிகால பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது.

| |
|---|
| காலை **6.00** மணி முதல் **12.00** மணி வரை |
| மாலை **4.00** மணி முதல் **7.00** மணி வரை |

## அமைவிடம்

தருமபுரியிலிருந்து சேலம் செல்லும் நெடுஞ்சாலையில் 8 கி.மீ. தொலைவில் உள்ள அதியமான்கோட்டை எனும் ஊரின் மேற்குப்புறத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிருந்து பேருந்து மற்றும் ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியிலில் தங்கும் வசதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு சென்றாய சுவாமி திருக்கோயில்**

அதியமான்கோட்டை, தருமபுரி வட்டம்,

தருமபுரி மாவட்டம். – **636 807**



**ஆலயம்**



**வித்யாலயம் – கல்வி கற்கும் இடம்**

**மடாலயம் – ஞானியர் வாழுமிடம்**

**தேவாலயம் – ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு சிவன் எழுந்தருளியுள்ள இடம்**



## அருள்மிகு சோமேஸ்வரர் சுவாமி திருக்கோயில்

அதியமான்கோட்டை.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு சோமேஸ்வரர் சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் சோமாம்பிகை |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

### தலச்சிறப்பு

அதியமான்கோட்டை அருள்மிகு சென்றாய சுவாமி திருக்கோயிலுக்கு வடகிழக்குப் பகுதியில், அருள்மிகு சோமேஸ்வரர் திருக்கோயில் அமைந்துள்ளது. கருவறை முன்மண்டபம் மட்டும் அமைந்துள்ளது. கருவறையின் உள்ளே சோமேஸ்வரர் லிங்கத்திருமேனியுடன் அமைந்துள்ளார். மேல்பாகம் இரண்டு பள்ளங்களுடன் உச்சி உயர்ந்த சிவலிங்கம் அதிக உயரமின்றி காணப்படுகிறது.

சோமன் என்பது சந்திரனுக்குப் பெயர். சந்திரனைத் தலையில் சூடிய பெருமான் சோமேஸ்வரர் என்று

அழைக்கப்படுவார். அதைக்காட்டுவதுதான் சிவலிங்கத்தின் மீதுள்ள பள்ளங்கள் என்று எண்ணத் தோன்றுகின்றது. லிங்கத்திற்கு அருகில் அம்பிகை அமைதியான சிறிய உருவத்தில் அழகாக அமைக்கப்பட்டு வழிபடப்பட்டு வருகின்றார். அதற்கு முன்னால் விநாயகர் திருவடிவம் உள்ளது.

திருக்கோயிலுக்கு முன்னால் நந்தியும், பலிபீடமும் உள்ளன. அதற்குப் பின்னால் திருவாச்சி போல அறைவட்டமான வேலைப்பாடுகள் நிறைந்த கல்லின் வடிவம் அமைக்கப் பெற்றுள்ளது.

## தனிச்சிறப்பு

சோமேசுவரப் பெருமான் மேற்குப் பார்த்து அமைந்திருப்பதால், ஒரு குறிப்பிட்ட நாளில் மேற்திசையில் தோன்றும் நிலவின் வெள்ளொளி கல் வளையத்தின் வழியாக பெருமான் மேல் படும்படியாக யூகத்துடன் அமைக்கப்பட்டுள்ளது.



## திருவிழாக்கள்

சித்ரா பௌர்ணமி பிரமோற்சவத் திருவிழா 10 நாட்கள் மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. ஆனித் திருமஞ்சனம், சிவன்ராத்திரி உற்சவம், கார்த்திகை தீப உற்சவம், அன்னாபிஷேக உற்சவம், மாதாந்திர பௌர்ணமி, அமாவாசை உற்சவம் மற்றும் பிரதோஷ உற்சவம் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 8.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 4.00 மணி முதல் 7.00 மணி வரை

## அமைவிடம்

தருமபுரியிலிருந்து சேலம் செல்லும் நெடுஞ்சாலையில் 8 கி.மீ. தொலைவில் உள்ள அதியமான்கோட்டை எனும் ஊரின் மேற்குப்புறத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிலிருந்து பேருந்து மற்றும் ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு சோமேஸ்வரர் சுவாமி திருக்கோயில்**

அதியமான்கோட்டை, தருமபுரி வட்டம்,
தருமபுரி மாவட்டம். – 636 807.





## அருள்மிகு ஆஞ்சநேய சுவாமி திருக்கோயில்

வே.முத்தம்பட்டி

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு ஆஞ்சநேயர் சுவாமி |
| ஆகமம் | : | பாஞ்சராத்ரம் |

### தலச்சிறப்பு

இத்திருக்கோயில் அடர்ந்த வனப்பகுதியுடன் கூடிய மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளது. இம்மலையில் இராட்சதப் பாறைகளும், உயர்ந்த மரங்களும் காணப்படுகிறது. இம்மலையில் 70 அடி உயரத்தில் உள்ள பாறையில் 8 அடி உயரத்தில் ஆஞ்சநேயர் சிலை சிறந்த வேலைப்பாடுகளுடன் காணப்படுகிறது. இத்திருக்கோயிலின் எதிர்ப்புறம் உள்ள குன்றின் அடிவாரத்தில் விநாயகர் சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.



## தனிச்சிறப்பு

இத்திருக்கோயில் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. வீரஆஞ்சநேயர் உருவம் பாறையில் புடைப்பு சிற்பமாக செதுக்கப்பட்டு பூஜிக்கப்பட்டு வருகிறது. திருக்கோயிலை ஒட்டி சலசலக்கும் சிற்றோடை ஒன்று செல்கிறது.

## திருவிழாக்கள்

ஆடி 18 மற்றும் அனுமன் ஜெயந்தி திருவிழா வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. ஆடி அமாவாசை உற்சவம், சித்திரை மாதப் பிறப்பு உற்சவம், தெலுங்கு வருடப்பிறப்பு உற்சவம், மாதாந்திர அமாவாசை உற்சவம் மற்றும் வாராந்திர செவ்வாய் மற்றும் சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு செய்யப்பட்டு வருகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் உச்சிகால பூஜை என
தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் மாலை 6.00 மணி வரை

## அமைவிடம்

தருமபுரி நகரிலிருந்து 15 கி.மீ தொலைவில் உள்ள பாகல்பட்டி எனும் கிராமத்திலிருந்து வனப்பகுதியில் 7 கி.மீ தொலைவில் உள்ள வே.முத்தம்பட்டி எனும் கிராமத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி நகரிலிருந்து வே.முத்தம்பட்டிக்கு பேருந்து வசதி உள்ளது. நல்லம்பள்ளியிலிருந்து ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் விடுதி வசதி உள்ளது.



**தொடர்பு முகவரி**


செயல் அலுவலர்

**அருள்மிகு ஆஞ்சநேய சுவாமி திருக்கோயில்**

வே.முத்தம்பட்டி, தருமபுரி வட்டம்,
தருமபுரி மாவட்டம். – 635 301.




### கல்வி / ஞானம்



**கல்வி / ஞானத்தில் முன்னேற
விரும்புபவர்கள் சரஸ்வதி தேவியை
"ஐம் சரஸ்வத்யை நம" என்ற மந்திரத்தாலும்,
ஸ்ரீ ஹயக்ரீவரை " ஓம் ஹயக்ரீவாய நம "
என்று மந்திரத்தாலும் ஜபித்து வழிபட்டு
வருதல் வேண்டும்.**





## அருள்மிகு ஆருணேஸ்வரர் சுவாமி திருக்கோயில்

காரிமங்கலம்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு ஆருணேஸ்வரர் சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் அபிதகுஜலாம்பாள் |
| தல விருட்சம் | : | அரச மரம் |
| தீர்த்தம் | : | பிரம்ம தீர்த்தம் |
| ஆகமம் | : | சிவ ஆகமம் |

### புராணச்சிறப்பு

காரிமங்கலம் அருகில் ஜெய்னூர் என்ற கிராமத்தில் ஜைன மதத்தினர் வாழ்ந்து வந்தனர். ஜைனர்கள் சைவ மதத்தை எதிர்த்ததால் மூன்றாம் குலோத்துங்கச் சோழன் தஞ்சையி–லிருந்து படைகளுடன் வந்து ஜைன மதத்தினரை எதிர்த்துப் போர் புரிந்தார். போரில் வெற்றியும் அடைந்தார். போருக்கு முன்பு படை வீரர்களுடன் தங்கிய போது ஆருணேஸ்வரர் சுவாமி மூன்றாம் குலோத்துங்கச் சோழனுக்கு கனவில் காட்சியளித்துள்ளார்.

போருக்காக அங்குள்ள மலைக்காட்டில் தங்கிய போது அவரது கனவில் சுயம்பு லிங்கம் காட்சியளித்து நீ போரில்

வெற்றி பெறுவாய் என அருள்புரிந்தார். பொழுது விடிந்ததும் ஒரு மரத்தின் கீழ் பசு தானாக பால் சுரந்ததைக் கண்டார். அவர் கனவில் காட்சி தந்த ஆருணேஸ்வரர் சுயம்பு லிங்கமாக அங்கு அவருக்குக் காட்சியளித்தார். பின்னர் அருள்மிகு ஆருணேஸ்வரர் சுவாமி சுயம்பு லிங்கத்திற்கு முனிவர்கள் ஆலோசனையுடன் ஸ்ரீ கௌதமமகரிஷி மேற்பார்வையில் கோயில் கட்டிப் பிரதிஷ்டை செய்த திருத்தலமாகும்.

## தலச்சிறப்பு

அருள்மிகு ஆருணேஸ்வரர் சுயம்பு லிங்கமாக மூலவர் ஸ்தலத்தில் காட்சித்தருகிறார். சுமார் **2000** ஆண்டுகளுக்கு முன்பே மூலவர் சுயம்பு லிங்கத்தை பல முனிவர்கள், சித்தர்கள் வழிபட்டு வந்தனர். அதற்கு சாட்சியாக இறைவன் முனிவர்களுக்கு லிங்கத் திருமேனியாக காட்சியளித்துள்ளார். காடு போன்ற இடத்தில் இறைவனின் காட்சி கிடைக்கப்பெற்றதால் (ஆருண்யா) ஆருணேஸ்வரர் என்றும் முனிவர்கள் பல வேதங்கள் அபிநய கலைகளோடு இருந்தமையால் அம்மன் ஸ்ரீ அபிதகுஜலாம்பாள் என அழைக்கப்படுகிறார்.

இத்திருக்கோயிலின் பின்புறம் கிழக்கு முகத்தில் ஒரு மலையும், திருக்கோயிலின் பின்புறம் இயற்கையாக உருவான நீர் நிறைந்த சுனையுடன் திருக்கோயில் அமையப்பெற்றுள்ளது. இத்திருக்கோயிலின் ராஜகோபுரம் தெற்கு முகமாக 7 நிலைகள் கொண்ட ராஜகோபுரமாக கம்பீரமாக அமைந்துள்ளது. ஸ்ரீ ஆருணேஸ்வரர் திருக்கோயில் மூலவரின் பின் பிரகாரத்தில் அமைந்த பஞ்சலிங்கங்களை முனிவர்களும் மற்றும் சித்தர்களும் வழிபட்டு வந்துள்ளனர். பஞ்சலிங்கங்கள் அனைத்தும் கிழக்கு முகமாக அமைந்துள்ளன.

## தனிச்சிறப்பு

மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் ஆரூத்ரா தரிசனத்தில் கிழக்கே உதிக்கும் சூரியக் கதிர்கள் 25 வினாடிகள் மூலவர் சுவாமி மற்றும் அம்பாள் மேல் பிரதிபலிக்கும் நிகழ்வு இத்திருக்கோயிலில் மிகவும் சிறப்பு வாய்ந்ததாக உள்ளது.

இன்றும் பௌர்ணமி தினத்தில் முனிவர்கள் சித்தர்களின் ஆன்மாக்கள் இம்மலையை சுற்றி வருவதாக ஐதீகம் உள்ளது. தகடூரை (தருமபுரி) ஆண்ட மன்னர்கள் அனைவரும் இத்திருக்கோயிலுக்கு வந்து ஸ்ரீ அபிதகுஜலாம்பாள் சமேத ஸ்ரீ ஆருணேஸ்வரரை வழிபட்டுச் சென்றுள்ளனர்.

## திருக்கோயிலில் உள்ள பிற சன்னதிகள்

1. அருள்மிகு அபிதகுஜலாம்பாள் சன்னதி
2. அருள்மிகு சுப்ரமணியர் சன்னதி
3. அருள்மிகு விநாயகர் சன்னதி
4. அருள்மிகு நவக்கிரக சன்னதி
5. அருள்மிகு துர்க்கை சன்னதி
6. அருள்மிகு பஞ்சலிங்க சன்னதி

## திருவிழாக்கள்

பங்குனி மாதத்தில் பங்குனி உத்திரத் திருவிழா 15 நாட்கள் வெகு சிறப்பாக நடைபெறும். மாதாந்திரக் கிருத்திகை, சஷ்டி, ஏகாதசி, சித்திரை மாதப்பிறப்பு, வைகாசி விசாகம், ஆனித்திருமஞ்சனம், விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, ஐப்பசி அன்னாபிஷேகம், மகா சிவராத்திரி, ஆருத்ரா தரிசனம், திருவாத்திரை திருநாள், கார்த்திகை தீபம், மார்கழி பஜனை வழிபாடு, வைகுண்ட ஏகாதசி, தைப்பூச

தேர்த் திருவிழா, மகா சிவராத்திரி, பங்குனி உத்திரம் உற்சவம் முதலியன சிறப்பாக நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என
தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.00 மணி வரை

## அமைவிடம்

தருமபுரியிலிருந்து 20 கி.மீ. தொலைவில் காரிமங்கலம் அமைந்துள்ளது. காரிமங்கலம் நகரின் மையப்பகுதியில் அழகான குன்றின் மீது இத்திருக்கோயில் அமையப் பெற்றுள்ளது. தருமபுரி நகரிலிருந்து பேருந்து வசதி உள்ளது. காரிமங்கலத்தில் தங்கும் விடுதிகள் உள்ளன.



**தொடர்பு முகவரி**


செயல் அலுவலர்

**அருள்மிகு ஆருணேஸ்வரர் திருக்கோயில்**

காரிமங்கலம், பாலக்கோடு வட்டம்,
தருமபுரி மாவட்டம். –635 111.

## கோயில்களில் கடைப்பிடிக்க வேண்டிய சில விதிமுறைகள்

- திருக்கோயில்களுக்குச் செல்லும் முன் நீராடி, அவரவர் சமய சின்னங்களை அணிந்து பக்தியுடன் செல்லவேண்டும்.
- கோபுர தரிசனம் கோடி புண்ணியம் என்பதால் கோபுரத்தை கண்டவுடன் இரு கைகளையும் கூப்பி வணங்கவேண்டும்.
- இறைவன் திருநாமத்தை உச்சரித்தவாறே செல்லவேண்டும்.
- முதலில் தல விநாயகரைத் தரிசிக்கவேண்டும்.
- பலி பீடத்தின் முன்பு தீய சிந்தனைகளை விட்டு, நல்ல சிந்தனைகளுடன் தரிசனத்திற்குச் செல்லவேண்டும்.
- இறைவனின் திருமந்திரத்தை சொல்லிக்கொண்டு இறைவனை நினைத்துக்கொண்டு பிரகாரம் சுற்றிவர வேண்டும்.
- தரிசனம் முடிந்து திரும்பும் போது சிறிது நேரம் அமர்ந்து தியானத்தை கொடிமரத்தின் அருகிலோ அல்லது தக்ஷிணாமூர்த்தி சன்னதியிலோ அல்லது தியான மண்டபத்திலோ இருந்து செய்து இறை நினைவுடன் செல்ல வேண்டும்.

## கோயில்களில் தவிர்க்க வேண்டிய சில விதிமுறைகள்

- சமயச் சின்னங்களை அணியாமல் ஆலயத்திற்குள் செல்லக்கூடாது.
- கோயிலில் உள்ள தெய்வங்களுக்கு முன்னால் நாம் நமது பின்புறம் காட்டி உட்காரக்கூடாது.
- தீப ஆராதனை நடக்கும் போது குறுக்கும், நெடுக்குமாக செல்லக்கூடாது.
- சன்னதிக்கு நேராக நின்று கொண்டு மற்றவர்கள் தரிசனம் செய்ய இடையூறு செய்யக்கூடாது.
- பிரகாரம் சுற்றி வரும்போது அரசியல் / வீட்டுக் கதைகளை மற்றவர்களிடம் பேசிக் கொண்டு செல்லக்கூடாது.
- பிரசாதத்தை சாப்பிட்டுவிட்டு கோயிலில் உள்ள கலை வேலைப்பாடுகள் மிகுந்த தூண்களில் கைகளைத் துடைக்கக்கூடாது.
- கோயிலை அசுத்தம் செய்யக்கூடாது.





# அருள்மிகு தீர்த்தகிரீஸ்வரர் திருக்கோயில்

### தீர்த்தமலை

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு தீர்த்தகிரீஸ்வரர் சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் வடிவாம்பிகை அம்மன் |
| தீர்த்தம் | : | இராம தீர்த்தம், குமார தீர்த்தம், கௌரி தீர்த்தம், அகஸ்தியர் தீர்த்தம், அக்னி தீர்த்தம் |
| தல விருட்சம் | : | பவள மல்லி |
| ஆகமம் | : | காமிகம் |

## புராணச் சிறப்பு

தீர்த்தகிரிப் புராணம் எனும் திருப்பெயருடன் இத்திருக்கோயிலுக்கு ஒரு தலபுராணம் உள்ளது. இதனை தவத்திரு சைவ எல்லப்ப நாவலர் இயற்றியுள்ளார். இப்புராணம் 431 பாடல்களைத் கொண்டுள்ளது. மேலும் தவத்திரு. அருணகிரிநாதர் பாடியுள்ள இரண்டு திருப்புகழ் பாடல்களும் இத்திருத்தலத்தின் பெருமையை எடுத்துக்காட்டுகின்றன.



ஸ்ரீராமபிரான் இராவணனை சம்ஹாரம் செய்துவிட்டு இலங்கையை விட்டுச் செல்லும் போது இவ்விடத்தில் சிவபூஜை செய்ய விரும்பினார். பூஜைக்குத் தேவையான தீர்த்தத்தை அனுமர் கொண்டு வர தாமதம் ஆகிவிட்டது. அதனால் இராமபிரான் இம்மலையில் உள்ள பாறை மீது அம்பு எய்தி தீர்த்தம் உண்டாக்கி இம்மலையை தீர்த்தமலையாக்கி சிவபூஜை செய்து முடித்தார். இதனால் இங்கு இராமர் தீர்த்தம் தோன்றியது. இதனால் ஏமாற்றத்துடன் வருத்தமடைந்த அனுமர் தான் கொண்டு வந்த தீர்த்தத்தை வீசி எறிந்தார். இந்த தீர்த்தம் தென்பண்ணை ஆற்றில் விழுந்த இடம் அனுமர்தீர்த்தமாக உருவாகியது. ஸ்ரீராமபிரான் சிவபெருமானை இரண்டு இடங்களில் பிரதிஷ்டை செய்து சிவபூஜை செய்துள்ளார். அதில் ஒன்று இராமேஸ்வரம் மற்றொன்று தீர்த்தங்கள் நிறைந்த தீர்த்தமலையாகும்.

1000 ஆண்டுகளுக்கும் மேற்பட்ட மிகவும் பழமை வாய்ந்த இத்திருக்கோயிலின் முன் மண்டபம் இராஜேந்திர சோழன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டுள்ளது. இத்திருக்கோயிலிலுள்ள காசிவிஸ்வநாதர் சன்னதி நாயக்கர்கள் ஆட்சிக்காலத்தில் கட்டப்பட்டுள்ளது.

## தலச்சிறப்பு

கடல்மட்டத்திலிருந்து சுமார் **1000** மீட்டர் **(3200** அடி**)** உயரத்திலும் லிங்க வடிவத் தோற்றத்துடன் அமைந்துள்ள




மலையின் மேலுள்ள இத்திருக்கோயிலில் அருள்மிகு தீர்த்தகிரீஸ்வரர் சுவாமி சுயம்பு மூர்த்தியாக அருள்பாலித்து வருகிறார். இத்திருக்கோயிலைச் சுற்றி தீர்த்தங்கள் பல உள்ளதால் தீர்த்தமலை எனப் பெயர் பெற்றது. மலைக்கோயிலின் நுழைவுவாயில் வடக்குநோக்கியும்,மலையடிவாரத்திலுள்ள கீழ்கோயில் நுழைவுவாயில் தெற்கு நோக்கியும் அமைந்துள்ளது. இத்திருத்தலத்தில் அன்னை வடிவாம்பாள் சன்னதி, காசிவிஸ்வநாதர் சன்னதி, சப்தகன்னிகள் சன்னதி ஆகியவை உள்ளன.



## தனிச்சிறப்பு

இத்திருத்தலத்தின் தனிச்சிறப்பானது தீர்த்தங்களாகும். சகல பாவங்களை நீக்கும் சக்தியுடைய இராமர் தீர்த்தம்; உயர்ந்த வாழ்வும், வளமும் கிடைக்கச்செய்யும் குமார தீர்த்தம்; திருமண பாக்கியம், மற்றும் திருமணத் தடை நீங்கச்செய்யும் கௌரி தீர்த்தம்; குன்மநோய் நீங்க அருள்புரியும் அகஸ்தியர் தீர்த்தம்; சாபங்களை போக்கும் அக்னித்தீர்த்தம்; என இத்திருக்கோயிலைச் சுற்றியுள்ள ஒவ்வொரு தீர்த்தத்திற்கும் தனி மகிமை உண்டு.

இவைத்தவிர யம தீர்த்தம், வருண தீர்த்தம், வாயு தீர்த்தம், இந்திர தீர்த்தம் மற்றும் அனுமன் தீர்த்தம் எனப் பல தீர்த்தங்கள் இம்மலையைச் சுற்றிலும் உள்ளன. இத்தீர்த்தங்கள் அனைத்தும் பல அற்புத மூலிகை சக்திகளைக் கொண்டுள்ளன.

## திருவிழாக்கள்

மாசி மாதம் பிரம்மோற்சவத் தேர்த் திருவிழா பத்து நாட்கள் தொடர்ந்து வெகு விமரிசையாக கொண்டாடப் படுகிறது. மாதாந்திர அமாவாசை, பௌர்ணமி, ஆடி 18,



மகாசிவராத்திரி, கார்த்திகை தீப உற்வசம், அன்னாபிஷேகம், ஆனித்திருமஞ்சனம், ஆருத்ரா தரிசனம் ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடு நடைபெற்று வருகின்றது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி, உச்சிகால பூஜை மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் மூன்றுகால பூஜை நடைபெறுகிறது

மலைக்கோயில்

காலை **6.00** மணி முதல் மாலை **6.00** மணி வரை

கீழ்க்கோயில்

காலை **7.30** மணி முதல் மாலை **11.00** மணி வரை

மாலை **5.00** மணி முதல் மாலை **7.30** மணி வரை






## அன்னதானத் திட்டம்

இத்திருக்கோயிலில் மாண்புமிகு தமிழக முதல்வரின் அன்னதானத் திட்டம் மூலம் தினமும் 70 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

## அமைவிடம்

தருமபுரி நகரிலிருந்து அரூர் வழியாக திருவண்ணாமலைக்குச் செல்லும் நெடுஞ்சாலையில்



அரூரிலிருந்து 16 கி.மீ தொலைவில் கடல்மட்டத்திருந்து சுமார் 1000 மீட்டர் (3200 அடி) உயரமுள்ள லிங்க வடிவமான மலையின் மீது சுமார் 1 கி.மீ. மலைப்பாதையுடன் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி – அரூரிலிருந்து பேருந்து வசதிகள் உள்ளன. தீர்த்தமலையில் தங்கும் வசதி இல்லை. அரூரில் தங்கும் விடுதி உள்ளது.



**தொடர்பு முகவரி**


செயல் அலுவலர்

**அருள்மிகு தீர்த்தகிரீஸ்வரர் திருக்கோயில்,**

தீர்த்தமலை, அரூர் வட்டம் தருமபுரி மாவட்டம். – **636 906.**




## பஞ்சதாண்டவத் தலங்கள்



**ஆனந்தத் தாண்டவம் – தில்லை, பேரூர்**
**அஜபா தாண்டவம் – திருவாரூர்**
**சுந்தரத் தாண்டவம் – திருவாலவாய் ( மதுரை)**
**ஊர்த்துவ தாண்டவம் – திருப்புக்கொளியூர் (அவிநாசி)**
**பிரம்ம தாண்டவம் – திருமுருகன் பூண்டி**



## அருள்மிகு ஹரிஹரநாத சுவாமி திருக்கோயில்

தருமபுரி.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு ஹரிஹரநாத சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் சௌந்தரநாயகி அம்மன் |
| தீர்த்தம் | : | சனத்குமார நதி |
| தல விருட்சம் | : | மல்லிகைக்கொடி |
| ஆகமம் | : | காமிகம் |

### புராணச் சிறப்பு

முன்னொரு காலத்தில் காடாக இருந்த காளத்தி என்ற இடத்தில் காட்டினுள்ளே இருந்த சிவலிங்கத்திற்கு பாம்பு, யானை, சிலந்தி ஆகியவை பூஜை புரிந்து வந்தன. இதில் சிலந்தியானது வலை பின்னி இறைவன் மீது இலை, தழை, தூசி படியாது காத்தது. ஆனால் யானையானது அருகிலுள்ள



குளத்தில் மூழ்கி நீர் முகர்ந்து தாமரை புஷ்பம் பறித்து வந்து தனது துதிக்கையால் சிலந்தியின் வலையை அறுத்து, அவ்விடத்தை சுத்தம் செய்து முகர்ந்து வந்த நீரினால் அபிஷேகம் செய்து புஷ்பம் சாத்தி பூஜித்தது. இவ்வாறு பலகாலம் கடந்தது. ஒருநாள் கோபம் கொண்ட சிலந்தி நாம் தினமும் இறைவனுக்குச் செய்கின்ற சேவையை இந்த யானையானது கெடுக்கிறது என எண்ணி யானையின் துதிகைக்குள் நுழைந்து தன் விஷக்கொடுக்கால் கொட்ட, யானையானது துதிக்கையை ஓங்கி அடித்தவாறு இறந்தது. யானை துதிக்கையால் ஓங்கி அடித்ததால் சிலந்தியும் இறந்தது. இறைவனின் அனுக்கிரகத்தால் சிலந்தி பூர்வ ஜன்ம ஞாபகத்துடன் சிலந்தி கண்ணுடன் தகடூரை ஆண்ட சோழர் குலத்திலே பிறந்தது. அந்தக் குழந்தை சிவந்த நிறத்துடன் உள்ள சிலந்திக் கண்ணுடன் பிறந்ததால் "கோச்செங்கண்ணான்" எனப்பெயரிட்டனர். அவர் தன் பூர்வ ஜன்ம ஞாபகத்தினால் தன் ஆட்சி காலத்தில் யானை ஏறா மாடக்கோயில்கள் எழுபது எழுப்பியதை அப்பரின் திருத்தாண்டகம், திருஞானசம்பந்தரின் தேவாரம் மூலம் அறியலாம். சுந்தரரின் தேவாரத்தில் இத்திருக்கோயில் வைப்புத்தலமாக பாடியுள்ளதை அறியலாம். முற்காலத்தில் சிலந்தியாக இருந்து பூஜித்த மன்னன், கட்டிய கோயிலுக்கு அதே காளத்தியப்பருக்கு (காளஹஸ்தி) பூஜை செய்கின்ற அர்ச்சகர் வம்சத்தினரே தற்போதும் ஸ்ரீ ஹரிஹரநாத சுவாமி திருக்கோயிலுக்குப் பூஜை செய்து வருகின்றனர்.

## தலச்சிறப்பு

இத்திருக்கோயிலானது இரட்டை பஞ்சாங்க முறையில் கட்டப்பட்டுள்ளது. மகா மண்டபத்தின் உட்புறம் வடக்கே தெற்கு பார்த்த நிலையில் அம்பிகை சன்னதி அமைந்துள்ளது. அம்மன் சன்னதி எதிரில் தெற்கு பகுதி சுவற்றில் அம்பிகையை தரிசிப்பதற்காக மிக அழகிய கல் பலகணி உள்ளது. மகா மண்டபத்தில் சிறிய துவாரத்தில் கணபதி, நந்தி, மேல்விதானத்தில் சோழர் கால இரட்டை மல்லர் சிற்பம், வெளிப்புறம் நந்தி மண்டபம், நிருதி மூலையில் செல்வ விநாயகர் சன்னதி, வாயு மூலையில் பழனியாண்டவர் சன்னதி, குபேர ஸ்தானத்தில் அபிஷேக தீர்த்த கிணறு, சண்டேஸ்வரர் சன்னதி, மகா மண்டபத்தில் ஈசான்ய பாகத்தில் மிக அழகான நவக்கிரக சன்னதி, நந்தி மண்டபத்தின் அருகில் தலவிருட்சமான மல்லிகைக்கொடி ஆகியன ஆகமமுறைப்படி அமைத்துள்ளன.

## கல்வெட்டுச் சிறப்பு

"கோச்செங்கண்ணீஸ்வரம்" – 1, 2ம் நூற்றாண்டில் தகடூரை ஆண்ட கோச்செங்கண்ணானால் கற்றளியாக (மாடக்கோயிலாக) எழுப்பப்பட்டு பின்னாளில் சிதிலமடைந்து, 10, 12ம் நூற்றாண்டில் வாழ்ந்த "3–ம் இராஜாராஜ அதிகைமானால்" (விடுகாதழகிய பெருமாள்) திருப்பணி செய்யப்பட்டுள்ளது. பின்னாளில் மீண்டும் 13,14ம் நூற்றாண்டுகளில் தற்போது உள்ள நிலையில் திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

1 ம், 2–ம் நூற்றாண்டு கல்வெட்டு ஸ்ரீ சௌந்தர நாயகி அம்மன் சன்னதி படிக்கட்டில் உள்ளது. மண்டபம் முன்புறம் 14–ம் நூற்றாண்டு கல்வெட்டு உள்ளது. நவக்கிரக மண்டபத்தின் உள்ளே 12–ம் நூற்றாண்டு கல்வெட்டு உள்ளது.

மஹா மண்டபத்தின் தெற்குப் புறம் வெளியில் 10– ம் நூற்றாண்டு கல்வெட்டு உள்ளது. மற்றும் தெலுங்கு, கன்னட கல்வெட்டுகள் சிதைந்தும் உள்ளன.




## திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் மகா சிவராத்திரி விழா மிகச் சிறப்பாக கொண்டாடப்படுகிறது. மாதந்திர பிரதோஷ காலங்களில் சிறப்பு வழிபாடு நடைபெற்று வருகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என
தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது.

காலை **7.00** மணி முதல் **11.00** மணி வரை

மாலை **5.00** மணி முதல் **8.00** மணி வரை

## அமைவிடம்

தருமபுரி பேருந்து நிலையத்திருந்து **1/2** கிலோமீட்டர் தொலைவில் இக்கோயில் அமைந்துள்ளது. ஆட்டோ வசதி உள்ளது. நடந்தும் வரலாம். தருமபுரியில் தங்கும் விடுதி வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

தக்கார் / செயல் அலுவலர்

**அருள்மிகு ஹரிஹரநாத சுவாமி திருக்கோயில்**

தருமபுரி நகர், தருமபுரி வட்டம் (ம) மாவட்டம். – **636 702.**



## அருள்மிகு லட்சுமி நரசிம்ம சுவாமி திருக்கோயில்

அளேபுரம்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு நரசிம்ம சுவாமி |
| இறைவி | : | அருள்மிகு லட்சுமி |
| தீர்த்தம் | : | திருமஞ்சனம் |
| தல விருட்சம் | : | அரசமரம் |
| ஆகமம் | : | வைகானஸம் |

### தலச்சிறப்பு

பிரம்மதேவர் பென்னாகரம் அருகில் உள்ள ஒகேனக்கல் (காவேரியில்) ஒரு யாகம் செய்ததாகவும் அது முடிந்ததும் அளேபுரத்தில் இலட்சுமி நரசிம்ம சுவாமியைப் பிரதிஷ்டை

செய்ததாக. ஒகேனக்கல் சென்று நீராடி வருபவர்கள் அளேபுரம் வந்து இச்சுவாமியை தரிசனம் செய்து சென்றால் நன்மை பயக்கும் என்பது ஐதீகம்.இத்திருக்கோயிலானது கிருஷ்ணதேவராயர் ஆட்சிக்காலத்திற்கு முற்பட்டது என்று கல்வெட்டுச் செய்தி மூலம் அறியப்பட்டுள்ளது. 25 அடி உயர கருங்கல் தீபத்தம்பமும், 50 அடி உயர மரக்கொடி மரமும் உள்ளது.

இலட்சுமி நரசிம்மசுவாமி, அமர்ந்த கோலத்தில் எழுந்தருளியுள்ளார். மகாமண்டபத்தில் வலப்புறம் கோதண்டராமர் சன்னிதியும், அவருக்கு எதிரே தென்புறம் வீர ஆஞ்சநேயர் சன்னதியும் உள்ளன. இது கருங்கல்லினால் கட்டப்பட்டுள்ள திருக்கோயிலாகும்.

## திருவிழாக்கள்

நரசிம்ம ஜெயந்தி, வைகுண்ட ஏகாதசி சொர்க்கவாசல் திருவிழா வெகு சிறப்பாக நடைபெறும். நவராத்திரி உற்சவம், ஸ்ரீராம நவமி உற்சவம், மாதாந்திர ஏகாதசி உற்சவமும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும் நடைபெற்று வருகின்றது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என
தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை 6.00 மணி முதல் 11.00 மணி வரை |
| மாலை 5.00 மணி முதல் 7.00 மணி வரை |

## அமைவிடம்

பென்னாகரத்திலிருந்து 3 கி.மீ. தொலைவில் அளேபுரம் என்ற சிற்றூர் உள்ளது. அந்த சிற்றூரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. பென்னாகரத்திலிருந்து பேருந்து வசதி, ஆட்டோ வசதி உள்ளது. பென்னாகரத்தில் தங்கும் விடுதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு லட்சுமி நரசிம்ம சுவாமி திருக்கோயில்**

அளேபுரம்

பென்னாகரம் வட்டம், தருமபுரி மாவட்டம்.





## அருள்மிகு தேசநாதேஸ்வரர் திருக்கோயில்

ஒகேனக்கல்.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு தேசநாதேஸ்வரர் |
| இறைவி | : | அருள்மிகு காவேரியம்மன் |
| தீர்த்தம் | : | காவேரி |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | காமிகம் |

### தலச்சிறப்பு

அகத்தியர், காவிரியாற்றைத் தன் கமண்டலத்தில் அடக்கியதும், விநாயகரே காக்கை உருவில் வந்து அதனைக் கவிழ்த்து, பெருக்கெடுத்து ஓடச்செய்ததும், புராணக் கதையாகும். அகத்தியர் வழிபட்ட மகேசுவரன் இங்கு தேசநாதேசுவரர் எனும் திருநாமம் கொண்டுள்ளார். பூவுலகின்

தலைவன் இங்கே தேசநாதராகத் திகழ்கிறார். காவேரி அம்மனாக உமையம்மை எழுந்தருளியுள்ளார்.

32 தூண்கள் கொண்ட மண்டபத்தில் தசாவதாரச் சிற்பங்கள் காணப்படுகின்றன. இத்திருக்கோயிலில் விநாயகர், முருகன், தட்சிணாமூர்த்தி, வீரபத்திரர் மற்றும் நவகிரகங்கள் சன்னதிகள் உள்ளன.

## தனிச்சிறப்பு

சிறந்த சுற்றுலாத் தலமாக விளங்கும் ஒகேனக்கல் காவேரி நதி ஓரத்தில் அமைந்துள்ளது. அகத்தியரால் வழிபடப்பட்டதாக கருதப்படும் இத்திருக்கோயிலுக்குப் பல்வேறு மாநிலங்களை சார்ந்த பக்தர்கள் வருகை புரிந்து அருள்மிகு தேசநாதேஸ்வரர் மற்றும் காவேரியம்மனைத் தரிசித்துப் பிராத்தனை செய்துச் செல்கின்றனர்.

## திருவிழாக்கள்

ஆடி 18 திருவிழா வெகு சிறப்பாக கொண்டாடப்பட்டு வருகிறது. சித்ரா பௌர்ணமி உற்சவம், ஆனித் திருமஞ்சன உற்சவம், அன்னாபிஷேக உற்சவம், கார்த்திகை தீப உற்சவம், சிவராத்திரி உற்சவம், மாதாந்திர அமாவாசை, பௌர்ணமி மற்றும் பிரதோஷ உற்சவமும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என
தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை 7.00 மணி முதல் 12.00 மணி வரை |
| மாலை 3.00 மணி முதல் 6.00 மணி வரை |

## அமைவிடம்

பென்னாகரத்திலிருந்து 12 கி.மீ தொலைவில் ஒகேனக்கல் என்ற ஊரில் காவேரி ஆற்றின் ஓரமாகத் திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிலிருந்து ஒகேனக்கல் செல்ல பேருந்து வசதி உள்ளது. பென்னாகரத்திலிருந்து பேருந்து வசதி, ஆட்டோ வசதி உள்ளது. ஒகேனக்கலில் தங்கும் விடுதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு தேசநாதேஸ்வரர் திருக்கோயில்**

ஒகேனக்கல், பென்னாகரம் வட்டம், தருமபுரி மாவட்டம். – **636 810.**



### பஞ்ச மூர்த்த தலங்கள்



| | |
|---|---|
| **நிலம் (ப்ருத்வி)** | **– திருவாரூர்** |
| **நீர் (அப்பு)** | **– திருவானைக்கால்** |
| **தீ (அக்னி)** | **– திருவண்ணாமலை** |
| **காற்று (வாயு)** | **– திருக்காளத்தி** |
| **வானம் (ஆகாயம்)** | **– சிதம்பரம்** |



# அருள்மிகு முத்தித்தராய சுவாமி மற்றும் திம்மராய சுவாமி திருக்கோயில்

நெருப்பூர்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு முத்தித்தராய சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் லட்சுமி தாயார் |
| தீர்த்தம் | : | காவேரி தீர்த்தம் |
| தல விருட்சகம் | : | அரச மரம் |
| ஆகமம் | : | வைகானஸம் |

## புராணச்சிறப்பு

மகாவிஷ்ணுவின் பரமபக்தனான பிரகலாதன் ஸ்ரீஹரி நாராயணன் தான் தன் கடவுள் என்று சொன்ன காரணத்தால் கொடிய அரக்கனான இரணியகசிபு பக்த பிரகலாதனை தன் மகன் என்றும் பாராமல் தன்னை கடவுள் என்று சொல்ல மறுத்ததால் அவனை யானை கால்களால் மிதிபடச் செய்தும்,

கொடிய விஷம் கொண்ட பாம்புகளுடன் தனி அறையில் அடைத்து வைத்தும், விஷ மருந்து கொடுத்து கொல்ல முயற்சி செய்தும், கடும் தீக்குள் இறங்க வைத்தும், தன் மகனைத் தானே கொல்ல முயற்சி செய்தும் இறுதியாக ஸ்ரீஹரி நாராயணனையே கொல்ல முற்பட்டான். இறுதியாக, பக்த பிரகலாதனின் தவத்தின் பயனாய் தூணிலிருந்து வெளிப்பட்ட ஸ்ரீஹரிநரசிம்மர் இரணியகசிபுவை வதம் செய்தார். இவ்வகையில் அவதரித்த நரசிம்மனை உலகமக்கள் வணங்கி பிறவிப்பிணி தீர ஸ்ரீபிரம்ம தேவர் சில இடங்களில் ஸ்ரீ நரசிம்மர் உருவப் பிரதிஷ்டை செய்து வழிபட்டார்.

இத்திருத்தலத்தில் மிகச்சிறிய அமைப்பாக சுயம்பு வடிவில் ஸ்ரீ நரசிம்மரின் உக்ரம் தணியவும், உலக மக்கள் வணங்கி நலம் பெறவும், பல்லாயிரம் வருடங்களாக ஸ்ரீ பிரம்மதேவரே அரசமரமாகவும், ஸ்ரீ மகாலட்சுமி தாயே குகை வடிவமாகவும், உக்ர நரசிம்மர் சாந்தமடைய கங்காதேவியே நீரோடையாகவும், பாவம் பல செய்து தீரா பழியுடையோர் வௌவால்களாகவும், உக்ர நரசிம்மர் யோகங்களை அள்ளித் தருவதால் யோக சாந்த நரசிம்மராகவும் காட்சியளித்து அருள்பாலித்து வருவதாகச் சான்றோர்கள் வழிவழியாக புராணமாகக் கூறுகின்றனர்.

## தலச்சிறப்பு

பென்னாகரத்திற்குத் தென்மேற்கில் நெருப்பூர் எனும் கிராமத்திலிருந்து சற்று தொலைவில் உள்ள வனப்பகுதியில் பெரிய அரசமரத்தின் அடியில் உள்ள ஒரு குகையினுள் நீரோடையுடன் கூடிய இடத்தில் வௌவால்கள் மேற்புறம் தொங்க, சுயம்பு வடிவில் அருள்மிகு முத்தித்தராய சுவாமி (ஸ்ரீ நரசிம்ம சுவாமி) எழுந்தருளியுள்ளார். உலகையே எரிக்கும் ஆற்றலோடு வெளிப்பட்ட ஸ்ரீ நரசிம்மர் இங்கு தவமிருந்ததால் இந்தப் பகுதி நெருப்பூர் எனப் பெயர் வழங்கப்பட்டது.



## தனிச்சிறப்பு

குழந்தை பாக்கியம் இல்லாத தம்பதியினர் இங்குப் பிரார்த்தனை செய்து தீர்த்தம் வாங்கிச் செல்வதால் விரைவில் குழந்தைப்பேறு கிடைக்கிறது. பிரார்த்தனை நிறைவேறிய பின் அமாவாசை தினத்தன்று குழந்தையின் எடைக்கு எடை நாணயங்களை மகாலட்சுமிக்காக துலாபாரம் இட்டும், சுவாமி மௌனமனை செய்தும் இங்கு தங்களது பிரார்த்தனையைப் பூர்த்தி செய்கின்றனர்.

சபரிமலை ஐயப்பன் சுவாமிக்கு மாலை போடுவது போல் இத்திருக்கோயிலிலும் பக்தர்கள் கார்த்திகை மாதத்தில் மாலை அணிவித்து விரதம் இருந்து பின் மார்கழி மாதத்தில் மாலை அவிழ்த்து விரதத்தைப் பூர்த்தி செய்வது இத்திருக்கோயிலின் தனிச்சிறப்பாகும்.

## திருவிழாக்கள்

வைகுண்ட ஏகாதசி சொர்க்கவாசல் திறப்பு விழா, மார்கழி மாத பஜனை நோன்பு வெகு சிறப்பாக திருவிழாவாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. தைமாதத்தில் உரியடித் திருவிழா மிகச்சிறப்பாக கொண்டாடப்படுகிறது. சித்திரை மாதப்பிறப்பு, ஆடி 18 உற்சவம், புரட்டாசி சனிக்கிழமை

உற்சவம், கார்த்திகை தீப உற்சவம், மார்கழி பஜனை நோன்பு, தைத் திருநாள் உற்சவம், மாதாந்திர அமாவாசை உற்சவம் மற்றும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடை திறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என
தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை **6.00** மணி முதல் **1.00** மணி வரை

மாலை **2.00** மணி முதல் **5.00** மணி வரை

## அன்னதானத் திட்டம்

இத்திருக்கோயிலில் மாண்புமிகு தமிழக முதல்வரின் அன்னதானத் திட்டம் மூலம் தினமும் **50** நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

## அமைவிடம்

பென்னாகரத்திலிருந்து 20 கி.மீ தொலைவிலுள்ள நெருப்பூர் எனும் சிற்றூரிலிருந்து வனப்பகுதியில் 2 கி.மீ. தொலைவில் இத்திருக்கோயிலில் அமைந்துள்ளது. இத்திருக்கோயில் அருகில் காவேரி கரையோரப் பகுதிகளான பண்ணவாடி மற்றும் கோட்டையூர் பரிசல் துறைகள் உள்ளன. பென்னாகரத்திலிருந்து பேருந்து வசதி, ஆட்டோ வசதி உள்ளது. நெருப்பூரிலிருந்து ஆட்டோ வசதி உள்ளது. நெருப்பூரில் தங்க இடம் இல்லை. பென்னாகரத்தில் தங்கும் விடுதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு முத்தித்தராய சுவாமி மற்றும்**
**திம்மராய சுவாமி திருக்கோயில்**

நெருப்பூர்,
பென்னாகரம் வட்டம், தருமபுரி மவாட்டம். – **636 810.**



## கோயில்



| | | |
|---|---|---|
| பெருங்கோயில் | – | மலைகள் மீது அமைக்கப்படும் கோயில் |
| மாடக்கோயில் | – | உயர்ந்த மேடைகள் மீது கட்டப்பட்ட கோயில் |
| கரக்கோயில் | – | ரதங்கள் போன்ற அமைப்பில் அமைந்த கோயில் |
| ஞாழற்கோயில் | – | மரங்களால் உருவாக்கப்பட்ட கோயில் |
| கொகுடிக்கோயில் | – | கொடிகள் சூழ்ந்த கோயில் |
| இளங்கோயில் | – | கோயிலை பழுது பார்க்கும் போது பாலாலயம் அமைத்தல் |
| ஆலக்கோயில் | – | ஆலமரத்தடியில் உள்ள கோயில் |
| மணிக்கோயில் | – | உருத்திராட்ச மணி போன்ற உருண்டையான விமானம் பெற்ற கோயில் |
| குடைவரைக் கோயில் | – | மலையை குடைந்த கோயில் |





# அருள்மிகு வெங்கடரமண சுவாமி திருக்கோயில்

மணியம்பாடி.

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு வெங்கடரமண சுவாமி |
| இறைவி | : | அருள்மிகு துளசியம்மாள், அருள்மிகு மங்கம்மாள் |
| தீர்த்தம் | : | பெருமாள் தீர்த்தம் |
| தல விருட்சம் | : | ஆலமரம் |
| ஆகமம் | : | வைகானஸம் |

## புராணச் சிறப்பு

இத்திருக்கோயில் கட்டப்பட்டு சுமார் 700 ஆண்டுகளுக்கும் மேலாகிறது. இத்திருக்கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்றில் இத்திருக்கோயிலைக் கட்டியவர் ஜெகதேவராயர் மனைவி வையம்மாராணி 1285ம் வருடம் என குறிப்பிடப்பட்டுள்ளது. நாயக்கமன்னர் காலத்தில் இப்பகுதியில் பட்டயக்காரராக இருந்தவர் ஜெகதேவராயர்



என்பதனையும் மாலைக்கட்டிகளாக இருந்த அருளையர், குருளையர் மூலம் இறைவன் இவ்விடத்தில் எழுந்தருளியுள்ளதை உணர்ந்து இத்திருக்கோயிலைக் கட்டி அந்த மாலைக்கட்டிகளை சுவாமிக்கு பூஜை செய்யும் உரிமையும் வழங்கியுள்ளார். இக்குறிப்பானது இத்திருக்கோயிலின் மகாமண்டபத்தின் வடக்குப்புறச் சுவரில் உள்ள கல்வெட்டு செய்தி மூலம் அறியலாம்.

## தலச்சிறப்பு

இத்திருக்கோயிலில் மூலவர் அருள்மிகு வெங்கட்ரமண சுவாமி தனி சன்னதியில் நின்ற நிலையில் நான்கு கரங்களுடன் சங்கு, சக்கரத்துடன் காட்சியளிக்கிறார். மூலவர் சன்னதியின் வலதுபுறம் அருள்தரும் மங்கம்மாள் தாயார் தனி சன்னதியில் நின்ற நிலையில் இரண்டு அபயங்களுடன் காட்சி தருகிறார். மூலவர் சன்னதியின் இடதுபுறம் தாயார் துளசியம்மாள் தனி சன்னதியில் ஆண்டாள் ரூபத்தில் நின்ற நிலையில் காட்சி தருகிறார்.



## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலுக்கு வருகை புரிந்து வேண்டிச் செல்லும் பக்தர்களின் கோரிக்கைகள் உடனடியாகப் பூர்த்தி அடைவதாக இப்பகுதி மக்களிடையே நம்பப்படுகிறது.

## திருவிழாக்கள்

பங்குனி மாதத்தில் பௌர்ணமியையொட்டி பிரம்மோற்சவ தேர்த் திருவிழா 11 நாட்கள் தொடர்ந்து நடைபெறுகிறது. புரட்டாசி மாத சனிக்கிழமை, வைகுண்ட ஏகாதசி, மார்கழி பஜனை நோன்பு உற்சவங்கள் ஆகியன சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என
தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| | |
|---|---|
| காலை | 6.00 மணி முதல் 1.30 மணி வரை |
| மாலை | 5.00 மணி முதல் 7.00 மணி வரை |

## அமைவிடம்

தருமபுரியிலிருந்து பொம்மிடி செல்லும் நெடுஞ்சாலையில் 20 கி.மீ தொலைவில் உள்ளது. தருமபுரி நகரிலிருந்து பேருந்து வசதி மற்றும் ஆட்டோ வசதி உள்ளது.திருக்கோயில் இடத்தில் தங்கும் வசதி இல்லை. தருமபுரி நகரில் தங்கும் விடுதிகள் உள்ளது.

**தொடர்பு முகவரி**


செயல் அலுவலர்

**அருள்மிகு வெங்கடரமண சுவாமி திருக்கோயில்**

மணியம்பாடி, பாப்பிரெட்டிப்பட்டி வட்டம்,

தருமபுரி மாவட்டம்.– **635 303.**


## அபிஷேகப் பலன்கள்

| | | |
|---|---|---|
| எண்ணெய் | – | சுகம் |
| மாப்பொடி | – | கடனைப் போக்கும் |
| நெல்லிமுள்ளிப் பொடி | – | நோய் போக்கும் |
| பஞ்ச கெவ்யம் | – | தூய்மை உண்டாகும் |
| பஞ்சாமிர்தம் | – | வெற்றியைத் தரும் (ஜயம்) |
| நெய் | – | வீடுபேறு |
| பால் | – | ஆயுளை வளர்க்கும் |
| தயிர் | – | மக்கட்பேறு |
| தேன் | – | சுகம் |
| கரும்புச்சாறு | – | பிணி நீக்கம் |
| சர்க்கரை | – | சத்துருவை அழிக்கும் |
| பழவர்க்கம் | – | கோபம் போக்கும் |
| எலுமிச்சம்பழம் | – | எமன் பயம் போக்கும் |
| இளநீர் | – | யோகம் தரும் |
| சந்தனம் | – | லட்சுமி கடாட்சம் |
| அன்னாபிஷேகம் | – | சாம்ராஜ்யம் |



# அருள்மிகு கல்யாணராமர் திருக்கோயில்

## தென்கரைக்கோட்டை

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு கல்யாணராமர் சுவாமி |
| இறைவி | : அருள்மிகு சீதா |
| தீர்த்தம் | : வாணியாறு தீர்த்தம் |
| தல விருட்சம் | : அரச மரம் |
| ஆகமம் | : வைகானஸம் |

### புராணச்சிறப்பு

விஜய நகரப் பேரரசு ஆட்சிக் காலத்தில் ஜெகதேவராயர் மற்றும் சீலப்ப நாயக்க மன்னரால் கட்டப்பட்ட புராணச்சிறப்புப் பெற்றத் திருத்தலமாகும்.

### தலச்சிறப்பு

இத்திருத்தலத்தில் அருள்மிகு கல்யாணராமர் திருக்கல்யாண கோலத்தில் அருள்மிகு சீதை தாயார்,

அருள்மிகு இலட்சுமணர், அருள்மிகு அனுமர் சமேதராய் எழுந்தருளி அருள்பாலித்து வருகிறார்.



## தனிச்சிறப்பு

அழகிய சிற்ப வேலைப்பாடுகளுடன் கட்டப்பட்டுள்ள இத்திருக்கோயிலில் இசை ஓசையை வெளிப்படுத்தும் கல்தூண்கள் பல உள்ளன. இக்கல்தூண்களைத் தட்டினால் ஒவ்வொரு தூணிருந்தும் ஒவ்வொரு விதமான இசை ஓசை வெளிப்படுவதும் சிறந்த கட்டடக் கலை தொழில் நுட்பத்துடன் இத்திருக்கோயில் கட்டப்பட்டுள்ளதும் இத்திருத்தலத்தின் தனிச்சிறப்பாகும்.

## திருவிழாக்கள்

புரட்டாசி சனிக்கிழமைகளில் சிறப்பு அபிஷேக ஆராதனை பூஜைகள் நடைபெற்று திருவிழாவாக கொண்டாடப்பட்டுகிறது. வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| | |
|---|---|
| காலை | 7.00 மணி முதல் 11.00 மணி வரை |
| மாலை | 5.00 மணி முதல் 7.00 மணி வரை |

## அமைவிடம்

இத்திருக்கோயில் அரூர் நகரில் இருந்து 15 கி.மீ தொலைவில் தென்கரைக்கோட்டை என்னும் சிற்றூரில் அமைந்துள்ளது. அரூர் பேருந்து நிலையத்திலிருந்து பேருந்து மற்றும் ஆட்டோ வசதி உள்ளது. இத்திருக்கோயில் இடத்தில் தங்கும் வசதி இல்லை. அரூரில் தங்கும் விடுதிகள் உள்ளன.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு கல்யாணராமர் திருக்கோயில்**

தென்கரைக்கோட்டை, பாப்பிரெட்டிப்பட்டி வட்டம்,
தருமபுரி மாவட்டம். – 636 904.



## இறை வழிபாடு



மனக்கவலையை தீர்க்க உள்ள ஒரே வழிபாடு – இறை வழிபாடு.
வழிபாடு – புற வழிபாடு, அகவழிபாடு என இருவகைப்படும்.
புறவழிபாட்டின் மூலமே அகவழிப்பாட்டை எய்த முடியும்.
புறவழிபாடு – அபிஷேகம், அர்ச்சனை, நைவேத்தியம்
தீபாராதனை, சோடசஉபசாரம் இவைகளைக் கொண்டது.



# அருள்மிகு செல்லியம்மன், மாரியம்மன் திருக்கோயில்

## குமாரசாமிப்பேட்டை.

| | |
|---|---|
| இறைவி | : அருள்மிகு செல்லியம்மன், மாரியம்மன் |
| தல விருட்சம் | : வேம்பு |

**தலச்சிறப்பு**

இத்திருத்தலத்தில் செல்லீஸ்வரியே செல்லியம்மனாக எழுந்தருளிருயுள்ளார். எட்டுக்கரங்களுடன் அசுரனை அழிக்கும் கோலத்தில் செல்லியம்மனும், நான்கு கரங்களுடன் அபயம் அளிக்கும் கோலத்தில் மாரியம்மனும் அருள்பாலிக்கின்றனர்.



## தனிச்சிறப்பு

சித்தபிரம்மை பிடித்தவர்களின் பிணி, இத்திருக்கோயிலில் வந்து வழிபட நீங்கி விடுவதும், பக்தர்கள் வினைகள் நீங்கி நல்வழி பெறுவதும் இத்திருத்தலத்தின் தனிச்சிறப்பாகும்.

## திருவிழாக்கள்

சித்திரை மாத பிறப்பை முன்னிட்டு அம்மனுக்கு மிகப்பெரிய கொப்பறையில் கூழ் ஊற்றித் திருவிழா வெகு சிறப்பாக மூன்று தினங்களுக்கு கொண்டாடப்படுகிறது. மாதாந்திர அமாவாசை பௌர்ணமி, ஆடி 18, நவராத்திரி, மார்கழி பஜனை நோன்பு, சித்திரை திருவிழா முதலியன இதர விஷேச நாட்களாகும்.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை **6.00** மணி முதல் **12.30** மணி வரை |
| மாலை **4.00** மணி முதல் **6.00** மணி வரை |

## அமைவிடம்

தருமபுரி நகரில் குமாரசாமிப்பேட்டை பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவில் தெற்கு இரயில்வே ரோட்டிற்கு அருகே அமைந்துள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவில் உள்ளது. நடந்தும் வரலாம். ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் விடுதிகள் வசதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு செல்லியம்மன், மாரியம்மன் திருக்கோயில்**

குமாரசாமிப்பேட்டை தருமபுரி வட்டம் (ம) வட்டம். – **636 703.**



### துவார பாலகர்கள் உணர்த்தும் தத்துவம்



கோயில் வாசலில் இருபுறமும் துவாரபாலகர்கள் வீற்றிருப்பர். துவார பாலகர்களில் ஒருவர் ஆள்காட்டி விரலைக் காட்டி நிற்பார். ஆள்காட்டி விரலைக் காட்டுவதன் தாத்பரியம் ''கடவுள் ஒருவரே'' என்பதை உணர்த்துவதாகும்.

மற்றொரு துவார பாலகர் கையை விரித்துக் காட்டுவார். அதன் தத்துவம் ''கடவுளைத் தவிர வேறொன்றும் இல்லை'' என்பதை உணர்த்துவதாகும்.



# அருள்மிகு கொல்லாபுரியம்மன் திருக்கோயில்

## இருமத்தூர்

இறைவி : அருள்மிகு கொல்லாபுரியம்மன்

### தலச்சிறப்பு

கல்தோன்றி மண்தோன்றா காலத்திற்குப் பிறகு உரல் சத்தமும், உலக்கை சத்தமும் இல்லாத இடத்தில் அம்மன் அமர்ந்து அருள்புரிந்ததாக வரலாறு சொல்லப்படுகிறது. இத்திருக்கோயிலில் சுயம்பு அம்மனும், பரிவார தேவதைகளும், சுயம்பு கல்கட்டும் உள்ளது.

### தனிச்சிறப்பு

திருமணத் தடை நீங்குதல், நோய்கள் குணமடைதல், காணாமல் போன பொருட்களைக் கண்டுபிடித்துத் தர



வேண்டுதல், எதிரிகளின் வேண்டுதலை அழித்தல், வாகனப் பூசை செய்தல் முதலியனவாகும்.

## திருவிழாக்கள்

ஆடி மாதத்தில் மாரியம்மன் திருவிழா வெகு சிறப்பாகக் கொண்டாப்படுகிறது. திங்கள், வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 6.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

## அன்னதானத் திட்டம்

இத்திருக்கோயிலில் மாண்புமிகு தமிழக முதல்வரின் அன்னதானத்திட்டம் மூலம் தினமும் 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

## அமைவிடம்

தருமபுரியிலிருந்து திருப்பத்தூர் சாலையில் 15 கி.மீ. தொலைவில் இருமத்தூர் கிராமத்தில் மாநில நெடுஞ்சாலையில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிலிருந்து பேருந்து மற்றும் ஆட்டோ வசதி உள்ளது. திருக்கோயிலில் பொங்கல் மண்டபம், தங்கும் மண்டபம் வசதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்

**அருள்மிகு கொல்லாபுரியம்மன் திருக்கோயில்**

இருமத்தூர், அரூர் வட்டம், தருமபுரி மாவட்டம். **635 201.**



## இறை மார்க்கம்



- இறைவனைப் புறத்தே வைத்து வழிபடுவது சரியா மார்க்கம்
  – இது அரும்பு
- இறைவனை அகத்தேயும், புறத்தேயும் வைத்து வழிபடுவது கரியாமார்க்கம் – இது மலர்
- அக வழிபாட்டின் முதிர்ச்சியினால் புறவழிபாடு தானே கழன்று அகவழிபாட்டில் நிலைத்து நிற்பது யோகம்
  – இது காய்
- எல்லாம் அதுவாகக் கண்டு சலனமற்று இருப்பது ஞானம்
  – இது பழம்





# அருள்மிகு ஆதிமூல வெங்கடரமண சுவாமி திருக்கோயில்

## அக்குமனஅள்ளி

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு ஆதிமூல வெங்கடரமண சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் அலுமேலு மங்கைத் தாயார் |
| தீர்த்தம் | : | ஸ்ரீ ஆஞ்சநேயர் தீர்த்தம் |
| ஆகமம் | : | பாஞ்சராத்ரம் |

### தலச்சிறப்பு

கடையேழு வள்ளல்களுள் ஒருவரான அதியமான் நெடுமான்அஞ்சி காலத்தில் கட்டப்பட்டதாகும். சுவாமி நின்றகோலத்திலும், தாயார் அமர்ந்த கோலத்திலும்

அருள்பாலிக்கிறார்கள். பன்னிரு ஆழ்வார்களும் தனிச்சன்னதியில் அருள்பாலிக்கிறார்கள்.

## திருவிழாக்கள்

புரட்டாசி சனிக்கிழமைகளில் திருவிழா வெகு விமரிசையாக கொண்டாடப்படுகிறது. வாராந்திர சனிக்கிழமைகள், மார்கழி மாதம் முதல் நாள், வைகுண்ட ஏகாதசி, நவராத்திரி உற்சவம், பொங்கல் பாரிவேட்டை உற்சவம், சித்திரை மாதப்பிறப்பு உற்சவம் ஆகியன சிறப்பாக கொண்டாடப்படுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி பூஜை – தினமும் ஒரு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் 12.00 மணி வரை

## அமைவிடம்

தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து அரூர் செல்லும் சாலையில் 12 கி.மீ. தொலைவில் உள்ள செம்மன அள்ளியிலிருந்து 1 கி.மீ. தொலைவில் மலைஅடிவாரத்தில் அமைந்துள்ளது. அரூர் வழியாக செல்லும் வெளியூர், உள்ளூர் பேருந்துகள் இங்கு நிற்கும். தருமபுரியில் தங்கும் வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்

**அருள்மிகு ஆதிமூல வெங்கடரமண சுவாமி திருக்கோயில்**

அக்குமன அள்ளி, தருமபுரி வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 704.



# அருள்மிகு புதூர் மாரியம்மன் திருக்கோயில்

## பாலக்கோடு

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு மாரியம்மன் |
| தீர்த்தம் | : | அம்மன் தீர்த்தம் |
| தலவிருட்சம் | : | வேம்பு |

### தலச்சிறப்பு

பருவ காலத்தில் மழையைப் பெய்யச் செய்து, வேனிற்காலத்தில் வெப்பத்தைத் தணித்து மக்களை காப்பதற்காக, மாரியம்மன் வழிபாடு தலைமுறை, தலைமுறையாக நடைபெற்று வருகிறது. சுமார் 200

ஆண்டுகள் பழமையுடைய இத்திருக்கோயிலானது கருவறை, முன்மண்டபம், கோபுரம் கொண்டு விளங்குகிறது.

அருள்மிகு புதூர் மாரியம்மன் நான்கு திருக்கரங்களுடன் இடது காலை மடித்து, வலது காலை தொங்கவிட்டபடி அமர்ந்த கோலத்தில் எழுந்தருளி அருள்பாலிக்கிறார். இத்திருக்கோயி–லின் மகாமண்டபத்தில் கோடைக்காலத்தில் மகாபாரதக்கதை சொல்லப்படுகிறது.

## திருவிழாக்கள்

கோடைக்காலத்தில் மாரியம்மன் திருவிழா 12 கிராம மக்களால் அலகுகுத்துதல், கரகம் எடுத்தல். பூமிதித்தல், மாவிளக்கு எடுத்தல் ஆகிய நிகழ்வுகளுடன் பக்திப் பரவசத்தோடு வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. மார்கழி பஜனை, ஜலபூஜை, பொங்கல் உற்சவம், சித்திரை மாதப்பிறப்பு, நவராத்திரி உற்சவம், ஆடி மாத உற்சவம், மற்றும் வாராந்திர வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை **6.00** மணி முதல் **12.00** மணி வரை |
| மாலை **5.00** மணி முதல் **8.00** மணி வரை |

## அமைவிடம்

இத்திருக்கோயில் பாலக்கோடு – தும்பலஅள்ளி மெயின் ரோட்டில் 1 கி.மீ. தொலைவில் உள்ளது. பாலக்கோட்டிலிருந்து பேருந்து வசதி, ஆட்டோ வசதி உள்ளது. பாலக்கோட்டில் தங்கும் விடுதி உள்ளது

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
**அருள்மிகு புதூர் மாரியம்மன் திருக்கோயில்**
பாலக்கோடு வட்டம், தருமபுரி மாவட்டம்–636 808.



### புகழ்பெற்ற நைவேத்தியங்கள்



பிள்ளையார்பட்டி – மோதகம்

பழநி – பஞ்சாமிர்தம்

சிதம்பரம் – களி

திருப்பதி – லட்டு

காஞ்சிவரதர் – இட்லி

அழகர் கோயில் – தோசை

வைத்தீஸ்வரன் கோயில் – தினை மாவு

சபரி மலை – நெய்

திருக்கண்ணபுரம் – முனையதரன் பொங்கல்

ஸ்ரீரங்கம் – அரவணை



# அருள்மிகு இலட்சுமி நரசிம்ம சுவாமி திருக்கோயில்

## பழைய தர்மபுரி

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு நரசிம்ம சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் ஸ்ரீதேவி,<br>அருள்தரும் பூதேவி |
| தலவிருட்சம் | : | அரச மரம் |

### தலச்சிறப்பு

சாந்த நரசிம்ம சுவாமியானவர் ஸ்ரீதேவி, பூதேவியுடன் நின்ற திருக்கோலத்தில் உயர்ந்த மேடையில் அருள்பாலிக்கிறார். பல தூண்களைக் கொண்ட நீண்ட மகாமண்டபமும் அதன் ஒரு புறம் பெரிய பாறையும் அதிலே வீர ஆஞ்சநேயர் திருவுருவமும் அமைந்துள்ளது. மறுபுறம்

பன்னிரு ஆழ்வார்களின் அழகான வடிவங்கள் அமைந்துள்ளன.

## தனிச்சிறப்பு

நரசிம்மரை வழிபடத் தேவையற்ற அச்சம் நீங்கும், தைரியம், புகழ், செல்வம் பெருகும்.

## திருவிழாக்கள்

புரட்டாசி சனிக்கிழமைகளில் திருவிழா வெகு விமரிசையாக கொண்டாடப்படுகிறது. வாராந்திர சனிக்கிழமைகள், பிரதோஷம், சுவாதி நட்சத்திர நாட்களில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி பூஜை – தினமும் ஒரு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை **6.00** மணி முதல் **9.00** மணி வரை |
| மாலை **5.00** மணி முதல் **7.00** மணி வரை |

## அமைவிடம்

தருமபுரி கிருஷ்ணகிரி மெயின் ரோட்டில் அளே தருமபுரி எனப்படும் பழைய தருமபுரிப் பகுதியில் அமைந்துள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் விடுதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

தக்கார்/ ஆய்வர்

**அருள்மிகு இலட்சுமி நரசிம்ம சுவாமி திருக்கோயில்,**

பழைய தருமபுரி, தருமபுரி வட்டம், தருமபுரி மாவட்டம். – **636 706.**



# அருள்மிகு பாலத்து முனியப்பன் சுவாமி திருக்கோயில்

## தொப்பூர்

| இறைவன் : | அருள்மிகு பாலத்து முனியப்பன் சுவாமி |
|---|---|

**தலச்சிறப்பு**

சேலம் மாவட்டத்தையும் தருமபுரி மாவட்டத்தையும் இணைக்கும் இடம் தொப்பூர் கணவாய் ஆகும். ஏற்காட்டில் உற்பத்தியாகி வரும் தொப்பையாறு ஊரின் தென்புறம் ஓடுகிறது. தொப்பையாற்றின் கணவாயில் இருப்பதால் தொப்பூர் என அழைக்கப்படுகிறது.

தொப்பூர் வளைவுப் பாலத்திற்கு அருகே இத்திருக்கோயில் அமைந்துள்ளது. சின்னண்ணன், பெரியண்ணன் என்னும் திருநாமத்துடன் இரண்டு முனியப்ப சுவாமிகள் கிழக்கு நோக்கி கம்பீரமான நிலையில்

அமர்ந்திருந்து அருள்பாலித்து வருகின்றனர். இயற்கை எழில் மிகுந்த சூழலில் இத்திருக்கோயில் உள்ளது.

## தனிச்சிறப்பு

தங்கள் பயணம் தடையின்றி இனிதே முடிவடைய இவ்வழியே செல்வோர், முனியப்ப சுவாமியை வணங்கி வாகன பூஜை செய்து செல்கின்றனர்.

## திருவிழாக்கள்

தை மாதம் கரிநாள் திருவிழா வெகு சிறப்பாக நடைபெறுகிறது. ஆடி–18 திருவிழா உற்சவம், ஆடி அமாவாசை உற்சவம், ஆயுத பூஜை உற்சவம், மாதாந்திர அமாவாசை உற்சவம், வாராந்திர செவ்வாய், ஞாயிற்றுக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என
தினமும் இரண்டுகால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை **6.00** மணி முதல் **12.00** மணி வரை |
| மாலை **3.00** மணி முதல் **6.00** மணி வரை |

## அமைவிடம்

தருமபுரி நகரிலிருந்து 26 கி.மீ. தொலைவில் தொப்பூர் என்னும் ஊரில் வளைவு பாலத்திற்கு அருகே இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிலிருந்து ஏராளமான பேருந்துகள் செல்கிறது. தருமபுரியில் தங்கும் விடுதி உள்ளது.

தொடர்பு முகவரி
செயல் அலுவலர்
**அருள்மிகு பாலத்து முனியப்பன் சுவாமி திருக்கோயில்**
தொப்பூர், தருமபுரி வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 352.





# அருள்மிகு சென்றாய சுவாமி திருக்கோயில்

**இலளிகம்**

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு சென்னகேசவப்பெருமாள் |
| இறைவி | : அருள்தரும் ஸ்ரீதேவி,<br>அருள்தரும் பூதேவி |
| ஆகமம் | : வைகானஸம் |

## தலச்சிறப்பு

இத்திருக்கோயிலில் ஸ்ரீதேவி, பூதேவி சமேத சென்னகேசவபெருமாள் நின்ற திருக்கோலத்தில் உள்ளார். இத்திருக்கோயில் மஹாமண்டபத்தின் உள்ளே தெற்குப் பகுதி சுவற்றில் சங்கு, சக்கரம் தாங்கிய சதுர் புஜங்களுடன் ஆநிரைகளுக்கு நடுவே வேணுகோபாலன் புடைப்புச் சிற்பம் உள்ளது. அதற்கு அருகில் பரதன் பாதுகை தாங்கியும், இலஷ்மணன் வணங்கிய நிலையிலும், சீதாராமர் அமர்ந்த

நிலையிலும் புடைப்புச் சிற்பங்களாக அருள்பாலிக்கிறார்கள். திருக்கோயிலில் பிரகாரத்தின் மேற்பக்க சுவரில் மீன் உருவமும், அமர்ந்த குரங்கின் உருவமும் புடைப்புச் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது.

## திருவிழாக்கள்

ஸ்ரீ ராமநவமி உற்சவம், நவராத்திரி 10 நாள் உற்சவமும் திருவிழாவாக கொண்டாடப்படுகிறது. கார்த்திகை தீப உற்சவம் வைகுண்ட ஏகாதசி உற்சவம், மாதாந்திர அமாவாசை உற்சவமும், வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும்

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை 6.00 மணி முதல் 11.00 மணிவரை |
| மாலை 5.00 மணி முதல் 8.00 மணி வரை |



## அமைவிடம்

தருமபுரிக்குத் தெற்கே 10 கி.மீ. தொலைவில் உள்ள நல்லம்பள்ளிக்குக் கிழக்கே 5 கி.மீ. தொலைவில் உள்ள இலளிகம் எனும் ஊரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி நகரிலிருந்து பேருந்து வசதி மற்றும் ஆட்டோ வசதி உள்ளது.

தொடர்பு முகவரி

செயல் அலுவலர்

அருள்மிகு சென்றாய சுவாமி திருக்கோயில்

இலளிகம், தருமபுரி வட்டம், தருமபுரி மாவட்டம். –636 804.



# அருள்மிகு கோதண்டராம சுவாமி திருக்கோயில்

## கடத்தூர்

இறைவன் : அருள்மிகுகோதண்டராம சுவாமி
இறைவி : அருள்தரும் சீதாப்பிராட்டி
ஆகமம் : வைகானஸம்

### தலச்சிறப்பு

இத்திருக்கோயிலில் சீதாப்பிராட்டி, லட்சுமணன் ஆகியோருடன் வில்லேந்தியபடி கோதண்டராம சுவாமி எழுந்தருளியுள்ளார். எதிரே கைகூப்பியப்படி ஆஞ்சநேயர் சன்னதி உள்ளது.

### தனிச்சிறப்பு

தங்கள் தொழிலைத் தினமும் துவங்கும் முன் கோதண்டராம சுவாமியை வணங்கி திருவருள் பெற்றுச் செல்லும் வழக்கம் இப்பகுதி மக்களிடையே உள்ளது.

## திருவிழாக்கள்

ஸ்ரீ ராமநவமித் திருவிழா வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. புரட்டாசி சனிக்கிழமைகளில் உற்சவம், வைகுண்ட ஏகாதசி உற்சவம், நவராத்திரி உற்சவம், மாதாந்திர பௌர்ணமி உற்சவம் மற்றும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை **6.00** மணி முதல் **12.00** மணி வரை |
| மாலை **4.00** மணி முதல் **7.00** மணி வரை |



## அமைவிடம்

தருமபுரி நகரிலிருந்து பொம்மிடி செல்லும் சாலையில் 20 கி.மீ தொலைவில் உள்ள கடத்தூர் எனும் ஊரில் பேருந்து நிலையத்திற்கு அருகில் உள்ளது. தருமபுரியிலிருந்து பேருந்து வசதி உள்ளது. கடத்தூரிலிருந்து ஆட்டோ வசதியும் உள்ளது. தருமபுரியில் தங்கும் வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு கோதண்டராம சுவாமி திருக்கோயில்**

கடத்தூர், பாப்பிரெட்டிப்பட்டி வட்டம், தருமபுரி மாவட்டம். – 635 303.



# அருள்மிகு சோமேஸ்வரர் சுவாமி திருக்கோயில்

## புட்டிரெட்டிப்பட்டி

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு சோமேஸ்வரர் சுவாமி |
| இறைவி | : அருள்தரும் சோமசுந்தரி அம்மன் |
| தலவிருட்சம் | : வில்வம் |

### தலச்சிறப்பு

சந்திரனுக்குச் சோமன் என்று பெயர். சோமன் வழிபட்டத் தலங்களில் ஈசன் சோமேஸ்வரர், சோமநாதர், சோமசுந்தரர் என்ற திருநாமம் கொண்டுள்ளார். அமிர்தம் பங்கிடுகையில் தேவர்களிடையே புகுந்த சுவர்பானு எனும் அசுரனை காட்டிக்கொடுத்து, மோகினியின் கரண்டியாக இரு துண்டாகும் ராகு–கேதுவின் தோஷம் சந்திரனைப் பற்றுவதால், அதனைப் போக்கிக்கொள்ள சோமேஸ்வரரை நோக்கித் தவமிருந்து அருள்பெற்றார். சந்திரன்–வாசுகி பாம்பு விஷத்தை கக்கிய தோஷம் நீங்கிடத் தவம் செய்தத் தலம். அதனால் சர்ப்ப தோஷ பரிகாரத் தலமாக விளங்குகிறது. இத்திருத்தலத்தில் சோமசுந்தரியாக நான்கு கரங்களுடன் அன்னை எழுந்தருளியுள்ளார். சூரியன், சந்திரன், காலபைரவர், நவகிரகங்களுக்கு தனித்தனி சன்னதி இத்திருக்கோயிலில் அமைக்கப்பட்டுள்ளது.

## தனிச்சிறப்பு

இவ்வூரைச் சுற்றியுள்ள பல கிராம மக்களின் குலதெய்வமாக காலங்காலமாக வழிபட்டு வரும் இத்திருக்கோயிலில் உள்ள பைரவர் சன்னதியில் தேய்பிறை அஷ்டமியன்று மேற்கொள்ளப்படும் சிறப்பு ஹோம பூஜை வழிபாடும், பிரதோஷ காலங்களில் நடைபெறும் கூட்டு வழிபாடும் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும்.

## திருவிழாக்கள்

வைகாசி விசாகம், தேர்த்திருவிழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.சித்ரா பௌர்ணமி உற்சவம், ஆனித் திருமஞ்சனம், நவராத்திரி உற்சவம், கார்த்திகை தீப உற்சவம், அன்னாபிஷேக உற்சவம், மாதாந்திர பிரதோஷம் மற்றும் அமாவாசை தினங்களில் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்



காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரை |
| மாலை 4.00 மணி முதல் 7.00 மணி வரை |

## அமைவிடம்

தருமபுரி நகரிலிருந்து பாப்பிரெட்டிப்பட்டி செல்லும் சாலையில் 20 கி.மீ. தொலைவில் உள்ள கடத்தூரிலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ள புட்டிரெட்டிப்பட்டி எனும் சிற்றூரில் உள்ளது. தருமபுரிலியிருந்து பேருந்து வசதி உள்ளது. கடத்தூரிலிருந்து ஆட்டோ வசதியும் உள்ளது. தருமபுரியில் தங்கும் வசதி உள்ளது.


**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு சோமேஸ்வரர் திருக்கோயில்**

புட்டிரெட்டிப்பட்டி, பாப்பிரெட்டிப்பட்டி வட்டம், தருமபுரி மாவட்டம். – 635 302.



# அருள்மிகு முனியப்பன் சுவாமி திருக்கோயில்

## பி.அக்ரஹாரம்

இறைவன் : அருள்மிகு முனியப்ப சுவாமி

### தலச்சிறப்பு

இத்திருக்கோயில் முனியப்பன் சுவாமியின் திருவுருவம் 25 அடி உயரத்தில் 12 அடி அகலமும் 4 அடி உயரமுள்ள மேடையில் அமர்ந்த திருக்கோலத்தில் அமைந்துள்ளது. சுவாமியின் அருகில் இருபுறமும் ஒரு சிப்பாயின் உருவமும், குதிரை வீரன் உருவமும், குதிரையின் உருவமும் அழகுற அமையப்பெற்றுள்ளது. முனியப்பன் சுவாமிக்கு கீழே ஒரு பாம்பாட்டி மகுடி வாசித்தும் பாம்பை படம் எடுத்து ஆடும்படி செய்யும் திருவுருவமும், புற்றும், ஆடும் பாம்பின் வடிவமும் சுதை வடிவில் உள்ளன.

### தனிச்சிறப்பு

இவ்வூரைச் சுற்றியுள்ள பல கிராம மக்களின் குலதெய்வமாக காலங்காலமாக வழிபட்டு வரும்

இத்திருக்கோயிலானது மிகவும் பழமையானதாகும். வேண்டியவர்களுக்கு வேண்டிய வரம் தந்தருளும் இத்தெய்வத்திற்கு பக்தர்கள் முப்பூஜை செய்து வழிபடுகின்றனர். பிள்ளைபேறு வேண்டி வழிபடுபவர் அப்பேறு கிடைக்கப் பெற்றவுடன் முடிக்காணிக்கை அல்லது துலாபாரக் காணிக்கை செலுத்தி பிரார்த்தனையை நிவர்த்தி செய்வர்.

## திருவிழாக்கள்

மார்கழி மாதம் 2 வது வார செவ்வாய்கிழமையன்று மிகப்பெரிய திருவிழா கொண்டாடப்படுகிறது. ஆடி 18 உற்சவம், தை பொங்கல் கரிநாள் உற்சவம், மார்கழி மாத செவ்வாய்கிழமை உற்சவம், வாராந்திர செவ்வாய் மற்றும் வியாழக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரை |
| மாலை 3.00 மணி முதல் 6.00 மணி வரை |

## அமைவிடம்



தருமபுரியிலிருந்து ஒகேனக்கல் செல்லும் வழியில் 24 கி.மீ. தூரத்தில் திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிலிருந்து ஏராளமான பேருந்துகள் செல்கின்றன. தருமபுரி நகரில் தங்கும் விடுதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு முனியப்பன் சுவாமி திருக்கோயில், பி.அக்ரஹாரம்**

தருமபுரி வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 813.





# அருள்மிகு சென்னியம்மன் திருக்கோயில்

## தா.அம்மாப்பேட்டை

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு சென்னியம்மன் |
| தீர்த்தம் | : | தென்பெண்ணை ஆறு |
| தல விருட்சம் | : | அரச மரம், வேம்பு மரம் |

### தலச்சிறப்பு

தென்பெண்ணை ஆற்றில் உள்ள பழைய பாறையே சென்னியம்மன் திருப்பாறையாகும். அம்மனும் இச்சுயம்பு பாறையில் எழுந்தருளி பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறார்.

### புராணச்சிறப்பு

கர்நாடகாவில் நவாப் ஆட்சி காலத்தில் ஒரு நவாப் தினசரி ஒரு குடும்பப் பெண்ணை அபகரிக்க



முயற்சித்துள்ளார். அதன்படி ஒரு குடும்பத்தில் உள்ள ஒரு பெண்ணை அபகரிக்க முயற்சி செய்யும் போது அப்பெண்ணின் தாய், தந்தை தங்கள் மகளை தொட்டிலில் வைத்து தென்பெண்ணை ஆற்றில் அனுப்பி விட்டனர். அதை அறிந்த சித்தர் ஒருவர் அப்பெண்ணை வெள்ளத்தில் அடித்துவரும் தொட்டிலில் இருந்து காப்பாற்றி வளர்த்து வந்தார். அதன் பின்னர் அப்பெண் சென்னியம்மன் என அழைக்கப்பட்டு தென்பெண்ணை ஆற்றில் பாறையைப் பிளந்து அதில் ஜோதியாகி பக்தர்களுக்கு அருள்புரிந்து வருவதாக புராணக்கதை கூறுகிறது.

## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலில் வழிபட குழந்தைப் பேறின்மை, திருமணத் தடை நீங்குதல், தொழில் முன்னேற்றத்தடை போன்ற பிரச்சனைகள் நிவர்த்தி செய்யப்படுகிறது.

## திருவிழாக்கள்

திருக்கோயிலில் ஆடி 18 திருவிழா வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. நவராத்திரி உற்சவம், ஆயுத பூஜை உற்சவம், சித்திரை மாதப்பிறப்பு, ஆடி மாத உற்சவம் மற்றும் வாராந்திர வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெற்று வருகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது.

| | |
|---|---|
| காலை **6.00** மணி முதல் **11.00** மணிவரை | |
| மாலை **5.00** மணி முதல் **7.00** மணி வரை | |

## அமைவிடம்

தருமபுரியிலிருந்து அரூர் மற்றும் தீர்த்தமலை சென்று அங்கிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ள தா.அம்மாபேட்டை என்னும் கிராமத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி – அரூர் (30 கி.மீ.) – தீர்த்தமலை (12 கி.மீ.) – தா.அம்மாபேட்டை 5 கி.மீ. தொலைவில் உள்ளது. அரூரில் தங்கும் விடுதி வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**


செயல் அலுவலர்

**அருள்மிகு சென்னியம்மன் திருக்கோயில்**

தா.அம்மாப்பேட்டை, அரூர் வட்டம் தருமபுரி மாவட்டம். – **636 906.**




### சில கோயில்களில் மட்டுமே



- மூலவரே வீதிவலம் வருவது சிதம்பரம் நடராஜர்.
- கர்ப்பகிருகத்தின் மேல் உள்ள கோபுரம் மிகப் பெரிய அளவில் (இராஜகோபுரம் போல்) இருப்பது தஞ்சை பெரிய கோயிலில் மட்டுமே.
- சிவன் கோயிலில் தீர்த்தம் கொடுப்பது இராமேசுவரத்தில் உள்ள அருள்மிகு இராமநாதர் கோயிலில் மட்டும்.
- அம்மன் சன்னதி இல்லாத கோயில் காஞ்சி ஏகாம்பர நாதர் கோயில்.



# அருள்மிகு வரதராஜ சுவாமி திருக்கோயில்

பாப்பாரப்பட்டி

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு வரதராஜ சுவாமி |
| இறைவி | : அருள்தரும் ஸ்ரீதேவி, அருள்தரும் ஸ்ரீ நீலாதேவி |

## தலச்சிறப்பு

சுமார் 1600 ஆண்டுகளுக்கு முற்பட்டதும், பழமையானதுமான இத்திருக்கோயில் ஹொய்சாலர் காலத்துத் திருக்கோயிலாகும். இத்திருக்கோயிலில் அருள்மிகு வரதராஜ சுவாமி அருள்தரும் ஸ்ரீதேவி, ஸ்ரீ நீலாதேவி சமேதராய் எழுந்தருளி அருள்பாலித்து வருகிறார். இத்திருத்தலத்தில் அருள்மிகு கோபாலகிருஷ்ணர் சமேத பாமா, ருக்மணி சன்னதியும், அருள்மிகு முக்யப்ராணர் சன்னதியும், அருள் ஸ்ரீமத் மத்வாச்சாரியார் சன்னதியும், அருள்மிகு ஸ்ரீமத் ராகவேந்திரர் சன்னதியும், அருள்மிகு பெண்ணேஸ்வரர், விநாயகர், வேதவல்லித் தாயார், விஷ்ணுதுர்க்கை, ஆஞ்சநேயர் சன்னதிகளும் அமைந்துள்ளன.

## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலில் பௌர்ணமி தினத்தன்று அருள்மிகு வரதராஜ சுவாமிக்கு மேற்கொள்ளப்படும் சத்யநாராயண சிறப்பு பூஜையில் கலந்துகொண்டு பிரார்த்தனை செய்பவர்களின் அனைத்து துன்பங்களும் நீங்கப்பெறுவது தனிச்சிறப்பாகும்.

## திருவிழாக்கள்

வைகாசி மாதத்தில் தேர்த் திருவிழா தேரோட்டத்துடன் 9 நாட்கள் தொடர்ந்து வெகு சிறப்பாக நடைபெறுகிறது. ஸ்ரீராம நவமி உற்சவம், கோகுலஷ்டமி உற்சவம், அனுமன் ஜெயந்தி உற்சவம், நவராத்திரி உற்சவம் மற்றும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| | |
|---|---|
| காலை | 6.00 மணி முதல் 12.00 மணி வரை |
| மாலை | 5.00 மணி முதல் 8.00 மணி வரை |



## அமைவிடம்

இத்திருக்கோயில் பாப்பாரப்பட்டியிலிருந்து 1.5 கி.மீ. தொலைவில் உள்ள பழைய பாப்பாரப்பட்டியில் அமைந்துள்ளது. தருமபுரி நகரிலிருந்து பாப்பாரப்பட்டிக்குப் பேருந்து வசதி மற்றும் ஆட்டோ வசதி உள்ளது. திருக்கோயில் இடத்தில் தங்கும் வசதி இல்லை. பாப்பாரப்பட்டியில் தங்கும் விடுதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்

**அருள்மிகு வரதராஜ சுவாமி திருக்கோயில்**

பாப்பாரப்பட்டி, பென்னாகரம் வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 809



## அருள்மிகு சென்றாய சுவாமி திருக்கோயில்

ஏலகிரி

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு சென்றாயப்பெருமாள் |

### தலச்சிறப்பு

மூலஸ்தானத்தில் பிருந்தாவனம் அமைக்கப்பட்டு அதன் நடுப்பாகத்தில் விக்ரகங்கள் வைத்து வழிபாடு செய்யும் வகையில் அமையப் பெற்றுள்ளது.

### தனிச்சிறப்பு

பக்தர்கள் வினைகள் நீங்கி நல்வழி பெறுவது இத்தலத்தின் தனிச்சிறப்பாகும்.

## திருவிழாக்கள்

சித்திரை முதல் நாள், புரட்டாசி இரண்டாம் நாள் சனிக்கிழமைகள் மிக விமரிசையாக கொண்டாடப்படுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி – தினமும் ஒரு கால பூஜை நடைபெறுகிறது.

| |
|---|
| காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரை |
| மாலை 4.00 மணி முதல் 7.00 மணி வரை |

## அமைவிடம்

தருமபுரி வட்டம் ஏலகிரி கிராமத்தில் மையப்பகுதியில் அமைந்துள்ளது. தருமபுரி நகரப் பேருந்து நிலையத்திலிருந்து பேருந்து வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் விடுதி உள்ளது.


**தொடர்பு முகவரி**

தக்கார்/ ஆய்வர்

**அருள்மிகு சென்றாய சுவாமி திருக்கோயில்**

ஏலகிரி, தருமபுரி வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 807.




## பக்தியின் வழிகள்



ஸ்வரவணம்–காதால் கேட்பது

ஸ்மரணம்– மனத்தில் இருத்துதல்

வந்தனம்–கீழ்ப்படிதல்

அர்ச்சனை–மனத்தால் வணங்குவது

பாதசேவை–தன்னைமறந்து பகவானுக்குத் தொண்டு செய்வது

தாஸ்யம்–தொண்டனாகவே தன்னை மாற்றிக் கொள்வது

ஸக்யம்–நன்மதிப்புள்ள நண்பனாகக் கருதுவது

ஆத்ம நிவேதனம்–சரணாகதி

கீர்த்தனை–தோத்தரித்தல்



# அருள்மிகு பெரியாண்டிச்சி அம்மன் திருக்கோயில்

பருவதனஅள்ளி

இறைவி : அருள்மிகு பெரியாண்டிச்சியம்மன்

## தலச்சிறப்பு

நின்றகோலத்தில் ஸ்ரீ பெரியாண்டிச்சியம்மன் நான்கு கரங்களுடன் அருள்பாலிக்கிறார்.

## தனிச்சிறப்பு

பக்தர்கள் வினை நீங்கி நல்வழி பெறுவது இத்தலத்தின் தனிச்சிறப்பாகும்.

## திருவிழாக்கள்

வருடாந்திர மகா சிவராத்திரி வெகு விமரிசையாக கொண்டாடப்படுகிறது. வாராந்திர வெள்ளிக்கிழமை, மாதாந்திர அமாவாசை மற்றும் பௌர்ணமி உற்சவம் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி – தினமும் ஒரு கால பூஜை நடைபெறுகிறது

| | |
|---|---|
| காலை **6.00** மணி முதல் **9.00** மணி வரை |
| மாலை **4.00** மணி முதல் **7.00** மணி வரை |

## அமைவிடம்

பென்னாகரம் பேருந்து நிலையத்திலிருந்து 1/2 கி.மீ. தொலைவில் உள்ள பருவதனஅள்ளியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி நகரிலிருந்து பேருந்து வசதி உள்ளது. பென்னாகரம் பேருந்து நிலையத்திலிருந்து நடந்தும் வரலாம். தருமபுரியிலிருந்து ஏராளமான பேருந்துகள் செல்கின்றன. பென்னாகரத்தில் தங்கும் விடுதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்

**அருள்மிகு பெரியாண்டிச்சி அம்மன் திருக்கோயில்**

பருவதனஅள்ளி, பென்னாகரம் வட்டம், தருமபுரி மாவட்டம். **636 810.**



### சப்த தரிசனம்



கோபுரம், விமானம், திருவாயில், பிரகாரம், பலிபீடம், உற்சவர், மூலவர், இவர்களைப் பார்த்து வணங்குவது சப்த தரிசனம் ஆகும்.

### பாஞ்ச ராத்ரம்

ஐந்து நாட்களில் ஐந்து ஆயுதங்களின் அம்சமாய்த் தோன்றிய சாண்டில்யர், ஔபசாயநர், மௌஞ்ஜாயநர், கௌசிகர், பரத்வாஜர் என்ற ஐந்து மகரிஷிகளுக்கு எம்பெருமான் உபதேசித்த ஆகமம்.



# அருள்மிகு அக்குமாரியம்மன் திருக்கோயில்

## சோமனஅள்ளி

இறைவன் : அருள்மிகு அக்குமாரியம்மன்
தலவிருட்சம் : வேம்பு மரம்

### புராணச்சிறப்பு

இத்திருக்கோயிலில் குடியிருக்கும் அம்மன் பாலக்கோடு நகரில் உள்ள அருள்மிகு புதூர் மாரியம்மன் திருக்கோயிலிலுள்ள அம்மனுக்கு அக்காள் என்பதால் "அக்காள் அம்மன்" என்று அழைக்கப்பட்டு நாளடைவில் இப்பெயர் மருவி "அக்குமாரியம்மன்" என வழங்கலாயிற்று. மேலும் ஆக்குபவளாகவும், பக்தர்களைக் காப்பவளாகவும் இருந்து வந்ததால் "ஆக்கும் அம்மன்" என்று அழைக்கப்பட்டு நாளடைவில் பெயர் மருவி "அக்கு அம்மன்" எனவும் "அக்கு மாரியம்மன்" எனவும் வழங்கலாயிற்று.

## தலச்சிறப்பு

இத்திருக்கோயில் பல நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றியதாகக் கருதப்படுகிறது. இத்திருக்கோயிலை சுற்றிலும் நிழல் தரும் அடர்ந்த வேப்ப மரங்களும், துரிஞ்சி மரங்களும் காணப்படுகின்றன. இவற்றின் நடுவில் அருள்மிகு அக்குமாரியம்மன் மிகவும் சக்தி வாய்ந்த அம்மனாக அமர்ந்து அருள்புரிந்து வருகின்றார்.

## தனிச்சிறப்பு

திருவிழாக்காலங்களில் அக்குமாரியம்மன் கரகம் ஊஞ்சலில் அமர்த்தி ஊஞ்சலாட்டப்படுகிறது. குழந்தை பாக்கியம் இல்லாதவர்கள் வேண்டுதல் நிறைவேறிய உடன் அவ்வூஞ்சலில் குழந்தைகளை அமர வைத்து ஊஞ்சலாடச் செய்வர்.

## திருவிழாக்கள்

இத்திருக்கோயில் சித்திரை மாதக் கடைசி நாள் முதல் வைகாசி மாதம் 15–ம் நாள் வரை அக்கு மாரியம்மன் திருவிழா மிகச்சிறப்பாக நடைபெற்று வருகிறது. இத்திருவிழாவில் சுற்று வட்டாரத்தைச் சார்ந்த 18 கிராம மக்களும் கலந்துகொள்கின்றனர். மேலும் திருவிழாவின் கடைசி நாளன்று மிகப்பெரிய மாட்டுச் சந்தை இத்திருக்கோயிலை ஒட்டி நடைபெறுகிறது. ஆடி 18, ஆடி வெள்ளிக்கிழமைகள், பங்குனி அமாவாசை, நவராத்திரி உற்சவம், மாதாந்திர அமாவாசை உற்சவம் மற்றும் வாராந்திர செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| | |
|---|---|
| காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரை | |
| மாலை 5.00 மணி முதல் 8.00 மணி வரை | |



## அமைவிடம்

இத்திருக்கோயில் தருமபுரி நகரிலிருந்து கிருஷ்ணகிரி செல்லும் நெடுஞ்சாலையில் 20 கி.மீ. தொலைவில் உள்ள சோமனள்ளி என்னும் ஊரில் அமைந்துள்ளது. தருமபுரி நகரிலிருந்து பாலக்கோடு, கிருஷ்ணகிரி, ஓசூர் செல்லும் பேருந்துகள் சோமனள்ளி வழியாகச் செல்கின்றன. தங்கும் வசதி திருக்கோயிலில் இல்லை. தருமபுரி, பாலக்கோட்டில் தங்கும் விடுதிகள் உள்ளன.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு அக்குமாரியம்மன் திருக்கோயில்**

சோமனஅள்ளி, பாலக்கோடு வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 806.



## அருள்மிகு சிங்காரத்தோப்பு முனீசுவரர் திருக்கோயில்

நடுப்பட்டி

இறைவன் : அருள்மிகு முனீசுவரர் சுவாமி

### தலச்சிறப்பு

மிகவும் ரம்மியமான சூழலில் துரிஞ்சி மரங்களும், அசோக மரங்களும், கீடி மரங்களும், செவ்வரளிப் பூக்கள் பூத்து குலுங்கும் பூஞ்செடிகள் நிறைந்த சிங்காரத்தோப்பில் முனீசுவரர் சுவாமி எழுந்தருளி இருப்பதால் இத்திருக்கோயில் "சிங்காரத்தோப்பு முனீசுவரர் திருக்கோயில்" எனப்பெயர் பெறலாயிற்று. உயர்ந்த மேடை மீது மிகவும் கம்பீரமான உருவத்துடன் அமர்ந்திருக்கும் முனீசுவரர் சுவாமி பகைவர்களும் கண்டு அஞ்சும் தோற்றத்துடன் காட்சியளிக்கிறார்.

### தனிச்சிறப்பு

இப்பகுதி மக்கள் அனைவருக்கும் காவல் தெய்வமாகவும், வழக்குகளைத் தீர்த்து வைக்கும் நீதிபதியாகவும், தவறு

செய்பவர்களையும், குற்றம் புரிவோர்களையும் தண்டித்திடும் தண்டல் நாயகனாகத் திகழும் முனீசுவரர் இப்பகுதியில் மிகவும் பிரசித்தி பெற்றவராவார்.

## திருவிழாக்கள்

ஆடி 18 திருவிழா சிறப்பாக நடைபெற்று வருகிறது. ஆயுத பூஜை, கார்த்திகை தீபத் திருவிழா, மார்கழி தனுர் மாத உற்சவம், மாதாந்திர அமாவாசை உற்சவம் மற்றும் வாராந்திர செவ்வாய்க்கிழமை, ஞாயிற்றுக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது.

| |
|---|
| காலை 6.00 மணி முதல் 12.00 மணிவரை |
| மாலை 3.00 மணி முதல் 6.00 மணி வரை |

## அன்னதானத்திட்டம்

இத்திருக்கோயிலில் மாண்புமிகு தமிழக முதல்வரின் அன்னதானத் திட்டம் மூலம் தினமும் 50 நபர்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டு வருகிறது.

## அமைவிடம்

தருமபுரியிலிருந்து அரூர் செல்லும் வழியில் நடுப்பட்டி என்னும் கிராமத்தில் 15 கி.மீ. தூரத்தில் திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிலிருந்து ஏராளமான பேருந்துகள் செல்கின்றன. அரூரில் தங்கும் விடுதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
**அருள்மிகு சிங்காரத்தோப்பு முனீசுவரர் திருக்கோயில்**
நடுப்பட்டி, அரூர் வட்டம், தருமபுரி மாவட்டம். – 635 305.





## அருள்மிகு பாலதண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்

### இலளிகம்

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு பாலதண்டாயுதபாணி |
| ஆகமம் | : | குமார தந்திரம் |

### தலச்சிறப்பு

இலளிகம் ஊரின் மையப்பகுதியில் மேற்குத் திசை நோக்கி அமைந்துள்ள இத்திருக்கோயிலில் பாலதண்டாயுதபாணி சுவாமி நின்றகோலத்தில் எழுந்தருளிக் காட்சியளிப்பது அறுபடை வீடுகளில் ஒன்றான பழனி மலையில் பழனியாண்டவர் காட்சியளிப்பது போன்றே காணப்படுகிறது. இத்திருக்கோயிலின் சுற்றுப்பிரகாரத்தில் காமாட்சியம்மன், விநாயகர், வள்ளி, தெய்வானை சமேத சுப்ரமணியர் மற்றும் நவக்கிரக சன்னதிகளும் தனித்தனியாக உள்ளன.

## திருவிழாக்கள்

தை மாதத்தில் தைப்பூசத் தேர்த்திருவிழா மிக சிறப்பாக கொண்டாடப்படுகிறது. நவராத்திரி உற்சவம், சிவராத்திரி உற்சவம், கந்தர் சஷ்டி இலட்ச்சார்ச்சனை உற்சவம், மாதாந்திர கிருத்திகை, சஷ்டி உற்சவம் மற்றும் வாராந்திர செவ்வாய் வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெற்று வருகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை **6.00** மணி முதல் **11.00** மணிவரை |
| மாலை **5.00** மணி முதல் **8.00** மணி வரை |

## அமைவிடம்

தருமபுரிக்குத் தெற்கே 10 கி.மீ. தொலைவில் உள்ள நல்லம்பள்ளிக்கு கிழக்கே 5 கி.மீ. தொலைவில் உள்ள இலளிகம் என்னும் ஊரின் மையப்பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி நகரிலிருந்து பேருந்து வசதி மற்றும் ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரி நகரில் தங்கும் விடுதி வசதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

தக்கார் / ஆய்வர்

**அருள்மிகு பாலதண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில்**

இலளிகம், தருமபுரி வட்டம், தருமபுரி மாவட்டம். – **636 804**



# அருள்மிகு காணியம்மன் திருக்கோயில்

## இருளப்பட்டி

| | |
|---|---|
| இறைவி | : அருள்மிகு காணியம்மன் |
| தல விருட்சம் | : வேம்பு |
| ஆகமம் | : வைகானஸம் |

### தலச்சிறப்பு

இத்திருக்கோயில் மிகவும் பழமையானத் திருக்கோயிலாகும். இருள இன மக்களின் பிரதான தெய்வமாக அவர்களால் காணியம்மனை சுயம்பு இலை வடிவில் பிரதிஷ்டை செய்து வழிபடப்பட்டும், ஒரு சிறிய பாறைக்கல்லின் மேற்புறம் சிறு சிதைவுடன் உருவமற்ற நிலையில் அம்மன் சுயம்புவாக எழுந்தருளி அருள்பாலித்து வருகிறார். கருவறையில் மூலவருக்கு அருகில் வள்ளிக்கொடி ஒன்று முளைத்து பாறைக்கல்லை துளைத்துக்கொண்டு கருவறைக்கு வெளியே வந்து கோபுரத்தின் வரை படர்ந்து விரிந்துள்ளது. இவ்வள்ளிக்கொடியே அம்மனின் தோற்றத்திற்கு காரணமாக இருப்பதாக இப்பகுதி மக்களால் நம்பப்படுகிறது.

## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலில் ஆவணி மாதம் முதல் புதன்கிழமை நடைபெறும் திருத்தேரோட்டத்திற்கு பின் நடைபெறும் முனிபிடித்தல் நிகழ்ச்சி இப்பகுதி மக்களிடையே மிகவும் பிரசித்தி பெற்று தனிச் சிறப்பு வாய்ந்ததாக கருதப்படுகிறது.

## திருவிழாக்கள்

திருக்கோயிலில் ஆவணி மாதத்தில் திருத்தேர் பெருவிழா தொடர்ந்து 7 நாட்களும், ஆவணி மாத முதல் புதன் கிழமையில் நடைபெறும் திருத்தேரோட்டமும் வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| | |
|---|---|
| காலை | 7.00 மணி முதல் 12.00 மணி வரை |
| மாலை | 5.00 மணி முதல் 8.00 மணி வரை |



## அமைவிடம்

தருமபுரி நகரிலிருந்து அரூர் வழியாக சேலம் செல்லும் வழியில் 50 கி.மீ. தொலைவில் இருளப்பட்டி அமைந்துள்ளது. அரூர் – தருமபுரி நகரிலிருந்து அரூர் வழியாக சேலம் செல்லும் நெடுஞ்சாலையில் சுமார் 50 கி.மீ. தொலைவில் நெடுஞ்சாலையை ஒட்டியே இத்திருக்கோயில் அமைந்துள்ளது. அரூரில் தங்கும் விடுதிகள் உள்ளன.


தொடர்பு முகவரி

செயல் அலுவலர்

**அருள்மிகு காணியம்மன் திருக்கோயில்**

இருளப்பட்டி, பாப்பிரெட்டிப்பட்டி வட்டம்,

தருமபுரி மாவட்டம். – 636 905.





# அருள்மிகு இலட்சுமிநாராயண சுவாமி திருக்கோயில்
## மோதூர்

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு நாராயண சுவாமி |
| இறைவி | : அருள்தரும் இலட்சுமி தாயார் |
| தீர்த்தம் | : பெருமாள் தீர்த்தம் |
| தலவிருட்சம் | : புளிய மரம் |
| ஆகமம் | : வைகானஸம் |

### தலச்சிறப்பு

சுமார் **300** அடி உயரமுள்ள சிறிய பாறைக் குன்றின் மீது அமைந்துள்ள இத்திருக்கோயில் மிகவும் பழமையானதாகும். திருமால் திருமகளோடு காட்சி தரும் போது பல்வேறு ரூபங்களில் சேவை சாதிக்கிறார். லட்சுமி வராகர், லட்சுமி நரசிம்மர் ஆகியவை சிறப்புக்கோலங்கள். அவதாரக் கோலங்களில் இலட்சுமி நாராயண கோலமானது உக்கிரம் நீங்கி, சாந்தஸ்வரூபியாக பக்தர்களுக்கு திருவருள் செய்த நிலையாகும். இலட்சுமி தேவியை, இடது தொடையில் அமர்த்தியபடி நாம் காணும் திருக்கோலமே லட்சுமி நாராயணர் திருக்கோலமாகும். வேண்டுதல் செய்வதை வாரி வழங்கும் ஸ்ரீதேவியை மடியில் அமர்த்தியபடி பக்தர்களின் கோரிக்கைகளை நிறைவு செய்யும் அற்புதக் கோலமே இத்திருக்கோலமாகும்.

## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலில் பாண்டவர் குகை உள்ளது. பாண்டவர்கள் அஞ்ஞான வாசம் செய்யும் போது இங்கு தங்கியிருந்து வழிபாடு செய்ததாக அறியப்படுகிறது. மேலும் இத்திருக்கோயில் மலை அடிவாரத்தில் கல்வெட்டு பழந்தமிழில் உள்ளது.

## திருவிழாக்கள்

புரட்டாசி சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும், புரட்டாசி நான்காவது சனிக்கிழமையின் போது தேரோட்ட விழாவும் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. கிருஷ்ண ஜெயந்தி உற்சவம், கார்த்திகை தீப உற்சவம், வைகுண்ட ஏகாதசி உற்சவம், மாதாந்திர அமாவாசை உற்சவமும், வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும் நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் உச்சிகால பூஜை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை 7.00 மணி முதல் 12.00 மணி வரை |
| மாலை 4.00 மணி முதல் 5.00 மணி வரை |

## அமைவிடம்

தருமபுரி – கிருஷ்ணகிரி நெடுஞ்சாலையின் மேற்கே தருமபுரியிலிருந்து 10 கி.மீ. தொலைவிலும், மாட்லாம்பட்டியிலி–ருந்து 3 கி.மீ. தொலைவிலும் மோதூர் கிராமத்தில் மலை மீது இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிலிருந்து பேருந்து வசதி, ஆட்டோ வசதி உள்ளது. மோதூர் கிராமத்தில் தங்கும் வசதி இல்லை. தருமபுரியில் தங்கும் விடுதி உள்ளன.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
அருள்மிகு இலட்சுமிநாராயண சுவாமி வகையறா திருக்கோயில்
மோதூர், பாலக்கோடு வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 808.





# அருள்மிகு வெள்ளையப்பன் திருக்கோயில்

**மஞ்சவாடி**

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு வெள்ளையப்பன் சுவாமி |
| தல விருட்சம் | : அவன்னா அரளி |

## தலச்சிறப்பு

கிழக்குத் தொடர்ச்சி மலைகளைச் சார்ந்த சேர்வராயன் மலையும், கல்வராயன் மலையும் பிரியும் கணவாயில் உள்ள மூங்கில் தோப்பின் நடுவில் இத்திருக்கோயிலில் அருள்மிகு வெள்ளையப்பன் சுவாமி சுயம்பு வடிவில் எழுந்தருளியுள்ளார். மிகவும் பழமையான இத்திருக்கோயிலைச் சுற்றி பெரிய பெரிய மலைகளும், மரங்களும், அடர்ந்த மூங்கில் புதர்களும் சூழ்ந்துள்ளன.

## தனிச்சிறப்பு

வனப்பகுதியில் அமைந்துள்ள திருக்கோயிலானதால் இவ்வழியே செல்லும் பயணிகள் அனைவரும் தங்கள் வாகனங்களை நிறுத்தி தங்கள் பயணம் தடையின்றி முடிவடைய வெள்ளையப்பன் சுவாமியை வழிபட்டுப் பிரார்த்தனைச் செய்து செல்வர்.

## திருவிழாக்கள்

ஆடி 18 திருவிழாவும், தை மாதத்தில் கரிநாள் உற்சவம் வெகு விமர்ச்சியாகக் கொண்டாடப்படுகிறது. மாதந்திர அமாவாசை மற்றும் பௌர்ணமி நாட்களில் சிறப்பு பூஜை நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி – தினமும் ஒருகால பூஜை நடைபெறுகிறது

| |
|---|
| காலை 6.00 மணி முதல் 1.00 மணி வரை |
| மாலை 3.00 மணி முதல் 7.00 மணி வரை |

## அமைவிடம்

தருமபுரி நகரிலிருந்து அரூர் வழியாக சேலம் செல்லும் வழியில் உள்ள மஞ்சவாடி கணவாயில் சுமார் 65 கி.மீ. தொலைவில் உள்ளது. அரூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது. இத்திருக்கோயிலில் தங்கும் வசதி இல்லை. சேலம், அரூர் ஆகிய ஊர்களில் தங்கும் விடுதிகள் உள்ளன.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு வெள்ளையப்பன் சுவாமி திருக்கோயில்**

மஞ்சவாடி, பாப்பிரெட்டிப்பட்டி வட்டம்,

தருமபுரி மாவட்டம். – 636 906.



# அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்

பாப்பிரெட்டிப்பட்டி

| | |
|---|---|
| இறைவி | : அருள்மிகு மாரியம்மன் |
| தல விருட்சம் | : அரச மரம் |

## தலச்சிறப்பு

இத்திருக்கோயில் 100 ஆண்டுகளுக்கும் முற்பட்ட பழமையான திருக்கோயிலாகும். இங்கு அழகிய நந்தவனத்துடன் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலின் மூலவரான மாரியம்மன் சுவாமி சுயம்பு வடிவில் அருள்பாலித்து கேட்டவர்களுக்குக் கேட்ட வரம் வழங்கி வருகிறார்.

## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலில் பக்தர்கள் அம்மனை தாங்கள் வேண்டும் வரம் கிடைக்கத் தரிசனம் செய்து வழிபட்டுச் செல்கின்றனர். பக்தர்களின் கோரிக்கையை நிறைவேற்றி அருள்பாலித்தும், நோய் நொடிகள் வராமல் காத்தும் வருகிறார்.

## திருவிழாக்கள்

ஆடி 18 உற்சவம், நவராத்திரி உற்சவம் மற்றும் மாதாந்திர அமாவாசை, பௌர்ணமி உற்சவமும், வாராந்திர செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும் நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.00 மணி வரை

## அமைவிடம்

தருமபுரியிலிருந்து 40 கி.மீ. தொலைவில் பாப்பிரெட்டிப்பட்டி பேருந்து நிலையம் அருகில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி மற்றும் அரூரி–லிருந்து பேருந்து வசதி உள்ளது. பாப்பிரெட்டிப்பட்டியில் தங்கும் விடுதிகள் உள்ளன.



**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
**அருள்மிகு மாரியம்மன் திருக்கோயில்,**
பாப்பிரெட்டிப்பட்டி நகர், வட்டம், தருமபுரி மாவட்டம். – 635 905.



## அருள்மிகு விநாயகர்,
## சுப்ரமணியர் சுவாமி திருக்கோயில்

அன்னசாகரம், தருமபுரி

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு விநாயகர் சுவாமி |
| இறைவன் | : | அருள்மிகு சுப்ரமணிய சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் வள்ளி<br>அருள்தரும் தெய்வானை |
| தலவிருட்சம் | : | வில்வம் |
| ஆகமம் | : | குமார தந்திரம் |

### தலச்சிறப்பு

அருள்மிகு விநாயகர், சுப்ரமணியர் திருக்கோயில் என அழைக்கப்பட்டாலும், அருள்மிகு சனீஸ்வரர் சன்னதி, அருள்மிகு காலபைரவர் சன்னதி மற்றும் அருள்மிகு துர்க்கையம்மன் சன்னதிகளும் இத்திருக்கோயிலில் அமைந்திருப்பது மிகச்சிறப்பானதாகும். இத்திருக்கோயிலின்

முன்பு ஐந்து நிலை ராஜகோபுரம் திராவிட பாணியில் சிற்ப வேலைப்பாடுகளுடன் கம்பீரமாகப் பொழிவுடன் காணப்படுகிறது.

## திருவிழாக்கள்

பங்குனி உத்திரத் தேர்த்திருவிழா 11 நாட்கள் மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. ஐப்பசி மாத கந்தர் சஷ்டி இலட்ச்சார்ச்சனை உற்சவம், சூரசம்ஹார உற்சவம், தைப்பூச உற்சவம், வைகாசி விசாக உற்சவம், மாதாந்திர சஷ்டி, கிருத்திகை உற்சவங்களும் வாராந்திர வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் சிறப்பு வழிபாடும் நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.00 மணி வரை



## அமைவிடம்

தருமபுரியிலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ள அன்னசாகரம் என்னும் ஊரின் மையப்பகுதியில் உள்ளது. தருமபுரியிலிருந்து பேருந்து மற்றும் ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் விடுதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு விநாயகர், சுப்ரமணிய சுவாமி திருக்கோயில்**

அன்னசாகரம், தருமபுரி வட்டம் (ம) மாவட்டம்.– 636 704.





## அருள்மிகு ஓம்சக்தி விநாயகர், வேல்முருகன், சக்திமாரியம்மன் திருக்கோயில்,

நெசவாளர் காலனி, தருமபுரி

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு விநாயகர் சுவாமி, அருள்மிகு வேல் முருகன் சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் சக்தி மாரியம்மன், அருள்தரும் வள்ளி, அருள்தரும் தெய்வானை |
| தலவிருட்சம் | : | வேம்பு |
| ஆகமம் | : | காமீகம் |

### தலச்சிறப்பு

தருமபுரி நகரில், செங்குந்தர் பெருமளவில் வசிக்கும் நெசவாளர் குடியிருப்பில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. செங்குந்த மரபினரால் கட்டப்பட்ட இத்திருக்கோயில் நுழைவு வாயில், சூலாயுத மண்டபம், அழகிய கருவறைகளுடன் அமைந்த உயர்ந்த மதில் சுவர்களுடன் திகழ்கிறது. ஓம்சக்தி

விநாயகர் மற்றும் வேல் முருகனுக்கு தனித்தனி சன்னதிகள் அமைந்துள்ளன. அருள்மிகு சக்தி மாரியம்மன் பிரதான தெய்வமாக எழுந்தருளி தனித்திருக்கோயிலாக திகழ்கிறது. மார்கழி மாதம் முழுவதும் அதிகாலை அபிஷேக ஆராதனை நடைபெற்று மாத இறுதியில் தாய்மார்களுக்கு மாங்கல்யக் கயிறு வழங்கப்படுகிறது.

## திருவிழாக்கள்

சித்ரா பௌர்ணமி திருவிழா 7 நாட்கள் மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. பங்குனி மாதத்தில் மாரியம்மன் திருவிழா மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. விநாயகர் சதுர்த்தி உற்சவம், நவராத்திரி உற்சவம், கந்தர் சஷ்டி இலட்சார்ச்சனை உற்சவம், ஆடி மாத உற்சவம், மாதாந்திர கிருத்திகை, சஷ்டி, சதுர்த்தி உற்சவமும் வாராந்திர செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும் நடைபெற்று வருகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் 11.30 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.30 மணி வரை

## அமைவிடம்

தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து 1/2 கி.மீ. தொலைவில் உள்ள நெசவாளர் குடியிருப்பு அருகில் உள்ளது. ஆட்டோ வசதி உள்ளது. நடந்தும் செல்லலாம். தருமபுரியில் தங்கும் விடுதி வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு ஓம்சக்தி விநாயகர், வேல் முருகன்,**
**சக்தி மாரியம்மன் திருக்கோயில்,**

நெசவாளர் காலனி, தருமபுரி வட்டம் (ம) மாவட்டம். 636 702.



## அருள்மிகு பிரசன்ன வெங்கடரமண சுவாமி திருக்கோயில்

கடைவீதி, தருமபுரி

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு பிரசன்ன வெங்கடரமண சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் ஸ்ரீதேவி, அருள்தரும் பூதேவி |
| தலவிருட்சம் | : | புன்னை மரம் |
| ஆகமம் | : | வைகானஸம் |

### புராணச்சிறப்பு

முன்பு ஒரு காலத்தில் வணிகர் ஒருவர் மற்றொரு வணிகரிடத்தில் அவசர காரணமாக கடன் பெற்றார். வாங்கிய கடனை திருப்பித் தர மறுத்த வணிகர் மீது கடன் வழங்கிய வணிகர் நீதிமன்றத்தில் முறையிட்டார். வழக்கை விசாரித்த நீதிபதி கடன் கொடுத்ததற்கு சாட்சி உண்டா ? என விசாரிக்க அருள்மிகு வெங்கடரமண சுவாமியே நீதிமன்றத்தில் பிரசன்னமாகி சாட்சி சொல்லியுள்ளார். அன்று முதல்

வெங்கடரமண சுவாமி என வழங்கப்பட்டு வந்த இம்மூலவரானவர் பிரசன்ன வெங்கடரமண சுவாமி என அழைக்கப்படலானார் என்பது அறியப்படுகிறது.

## தலச்சிறப்பு

இத்திருக்கோயில் மிகவும் பழமை வாய்ந்த திருக்கோயிலாகும். இத்திருக்கோயிலில் பிரசன்ன வெங்கடரமண சுவாமி, சங்கு சக்கரத்துடன் அபய வரதக் கரத்துடன் நின்ற கோலத்தில், ஸ்ரீதேவி, பூதேவி இருபுறமும் கொண்டு சேவை சாதிக்கிறார். இத்திருத்தலத்தில் அருள்மிகு பிரசன்ன வெங்கடரமண சுவாமி கம்பீரமான தோற்றத்துடன் கேட்டவரம் அருளும் வரதனாகவே காட்சியளிக்கிறார்.

## தனிச்சிறப்பு

இத்திருத்தலம் வர்த்தகப்பெருமக்களும், பொதுமக்களும், நாள்தோறும் தவறாது வந்து வழிபடும் திருக்கோயிலாகத் திகழ்கிறது.

## திருவிழாக்கள்

ஸ்ரீராம நவமி திருவிழா வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. நவராத்திரி 10 நாட்கள், மார்கழி மாதம் விடியற்காலை பூஜை, வைகுண்ட ஏகாதசி உற்சவம், புரட்டாசி சனிக்கிழமைகளில் உற்சவம், மாதாந்திர அமாவாசை, பௌர்ணமி உற்சவம் மற்றும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது.

காலை 7.00 மணி முதல் 11.30 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.30 மணி வரை

## அமைவிடம்

தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து 1/2 கி.மீ. தொலைவில் உள்ள கடைவீதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து ஆட்டோ வசதி உள்ளது. நடந்தும் செல்லலாம். தருமபுரியில் தங்கும் விடுதி வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
**அருள்மிகு பிரசன்ன வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,**
கடைவீதி, தருமபுரி நகர், தருமபுரி வட்டம் (ம) மாவட்டம். – 636 701.



**லிங்கத்தை வழிபட்டால் உண்டாகும் பலன்**



**லிங்கம் மூன்று பகுதிகள் கொண்டது.**
**அடிபாகம் பிரம்ம பாகம்**
மனிதனின் உயிர் மூச்சு
**நடுப்பாகம் விஷ்ணு பாகம்**
இது மனிதனின் தசை, ரத்தம் இவற்றிற்குரியது.
**மேல்பாகம் சிவன் பாகம்**
இது மனிதனின் எலும்பு, நரம்பு இவற்றைக் குறிக்கும்.
ஒரு லிங்கத்தை மட்டுமே வணங்கும் பட்சத்தில் மும்மூர்த்திகளையும் வணங்கும் பயன் நமக்கு கிட்டுகிறது.



## அருள்மிகு அங்காளம்மன் திருக்கோயில்,

வெளிப்பேட்டை, தருமபுரி

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு அங்காளம்மன் |
| தலவிருட்சம் | : | வேம்பு |

### தலச்சிறப்பு

இத்திருக்கோயில் மிகவும் பழமை வாய்ந்த பிரசித்தி பெற்றத் திருக்கோயிலாகும். இத்திருக்கோயிலில் அங்காளபரமேஸ்வரி அம்மன் ஐந்து தலை நாகம் குடை பிடிக்க மேற்கரங்களில் உடுக்கையும், பாசமும் ஏந்தி முன் கரத்தில் கத்தியும் இடது கரத்தில் கபாலமும் ஏந்தியபடி தலையில் தீச்சுவாலையைக் கிரீடமாகக் கொண்டு அமர்ந்த கோலத்தில் எழுந்தருளி பக்தர்களைக் காத்து வருகிறார்.

### தனிச்சிறப்பு

தருமபுரி நகரில் வணிகப் பெருமக்கள் அதிகமாக உள்ள கடைவீதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளதால் வணிகர்கள் வியாபாரத்தைத் துவங்கும் முன் பரமேஸ்வரி அம்மனை தரிசித்து செல்வர். மிகவும் சிறிய குழந்தைகளுக்கு



உடல் நலம் சரியில்லை என்றால் அக்குழந்தைகளை இங்கு அழைத்து வந்து சுவாமி தரிசனம் செய்வித்து நெற்றியில் விபூதி, குங்குமம் இட்டுச்செல்வர்.

## திருவிழாக்கள்

மாசி மாதத்தில் மகாசிவராத்திரி திருவிழா தொடர்ந்து 10 நாட்களுக்கு வெகு விமரிசையாக நடைபெறுகிறது.

நவராத்திரி உற்சவம், சித்ரா பௌர்ணமி உற்சவம், ஆடி 18 உற்சவம், மாதாந்திர அமாவாசை, பௌர்ணமி உற்சவம் மற்றும் வாராந்திர செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும் நடைபெற்று வருகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் 11.30 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.30 மணி வரை

## அமைவிடம்

தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து 1கி.மீ. தொலைவில் உள்ள வெளிப்பேட்டை என்னும் இடத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து ஆட்டோ வசதி உள்ளது. நடந்தும் செல்லலாம். தருமபுரியில் தங்கும் விடுதி வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு அங்காளம்மன் திருக்கோயில்,**

வெளிப்பேட்டை, தருமபுரி நகர், தருமபுரி வட்டம் (ம) மாவட்டம். 636 701.



## அருள்மிகு பட்டாளம்மன் திருக்கோயில்

மாரண்டஹள்ளி

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு பட்டாளம்மன் |
| தலவிருட்சம் | : | புளிய மரம் |

### புராணச்சிறப்பு

இப்பகுதி மக்கள் அருகிலிருக்கும் பெரிய நகருக்கு வெற்றிலை வியாபாரம் செய்யக் காட்டு வழியே நடந்து செல்லும் போது அருள்மிகு பட்டாளம்மன் சுவாமி அவர்கள் தலையில் கொண்டு சென்ற கூடையில் அமர்ந்து கொண்டதாம். பின்னர் அவர்களது கனவில் தான் சுயம்பாக இவ்விடத்தில் எழுந்தருளியிருப்பதாகவும் தனக்குக் கோயில் கட்டிப் பூஜை செய்து வந்தால், அவர்கள் குறைகள் யாவும் நிவர்த்தி ஆகும் என வாக்கு சொல்லியது. அதனைத் தொடர்ந்து அப்பகுதி மக்கள் அவ்விடத்தில் கோயில் கட்டி அருள்மிகு பட்டாளம்மனை வழிபாடு செய்து வரலாயினர் என வழிவழியாகச் செய்திகள் அறியப்படுகிறது.

## தலச்சிறப்பு

இந்தத் திருக்கோயில் ஆதி காலத்தில், இந்த ஊரிலும், சுற்றுப்புற கிராமங்களுக்கும் முதன்மைக் கோயிலாகும். இப்பகுதியில் உள்ள பக்தர்கள் எந்த வாகனத்தை வாங்கினாலும் முதலில் இத்திருக்கோயிலுக்கு வந்து பூஜை செய்கின்றனர். பக்தர்கள் குழந்தை பெற்றவுடன் 10,15 நாட்கள் ஆன பிறகு குழந்தையுடன் திருக்கோயிலுக்கு வந்து பூஜை செய்கின்றனர். இந்தத் தாயின் மடியில் குழந்தைகளை வைத்து வணங்கினால் எந்தவிதமான நோய் நொடி இல்லாமல் வாழும் என இப்பகுதி மக்களுடைய கருத்தாகும்.



## தனிச்சிறப்பு

இத்திருக்கோயிலில் சிடல் என அழைக்கப்பட்டு நடைபெற்றுவரும் திருவிழா மிகவும் வித்தியாசமானதாகும். திருக்கோயில் முன்பு உள்ள பெரிய கல் மரத்தில் குழந்தைகள் ஆவலுடன் உண்ணும் தின்பண்டங்களைக் கட்டி வைத்து அம்மரத்தைச் சுற்றி வலம் வந்து பூஜை செய்து பின்பு அதைப் பிரசாதமாகத் தருகின்றனர்.

## திருவிழாக்கள்

இத்திருக்கோயில் தை மாதக் கடைசியில் தொடர்ந்து 7 நாட்கள் பட்டாளம்மன் திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. மாதாந்திர அமாவாசை மற்றும் வாராந்திர செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை **6.00** மணி முதல் **12.00** மணி வரை

மாலை **5.00** மணி முதல் **8.00** மணி வரை

## அமைவிடம்

இத்திருக்கோயில் தருமபுரி நகரிலிருந்து 40 கி.மீ. தொலைவில் உள்ள மாரண்டஹள்ளி பேருந்து நிலையத்திலி–ருந்து 1/2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. தருமபுரி நகரி–லிருந்து பேருந்து வசதி உள்ளது. பாலக்கோட்டில் தங்கும் விடுதி வசதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

தக்கார் / ஆய்வர்

**அருள்மிகு பட்டாளம்மன் திருக்கோயில்,**

மாரண்டஹள்ளி, பாலக்கோடு வட்டம் தருமபுரி மாவட்டம். – **636 806.**



## திருவிளக்கு



திருவிளக்கு மும்மூர்த்தி வடிவம். ஆசானமாகிய அடிப்பாகம் பிரம்ம அம்சம், நெடித்தண்டாகிய நடுப்பாகம் விஷ்ணு அம்சம், நெய் ஏந்தும் அகல் பகுதி சிவன், அதன்மேல் உள்ள பகுதி மகேஸ்வரன், சிகரமாகிய உச்சிப்பகுதி சதாசிவன், நெய் – நாதம், திரி – பிந்து, சுடர் – திருமகள், பிழம்பு – கலைமகள், தீ – சக்தி.



# அருள்மிகு வெங்கடரமண சுவாமி திருக்கோயில்

வரதகுப்பம்

| | |
|---|---|
| இறைவன் | : அருள்மிகு வெங்கடரமண சுவாமி |
| தலவிருட்சம் | : புன்னை மரம் |
| ஆகமம் | : வைகானஸம் |

## தலச்சிறப்பு

வடக்கே சனத்குமார நதியும், தெற்கில் திருக்கோயிலை ஒட்டிய மாண்டியாறும், மேற்குப் புறம் விளைநிலங்களைக் கொண்ட இயற்கை எழில் நிறைந்த பகுதிகளைக் கொண்டு இத்திருக்கோயில் அமைந்துள்ளது. திருப்பதி என்று அழைக்கப்படும் திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள பெருமாளை வெங்கடேஸ்வரர், வேங்கடநாதர் என்றும் அழைப்பர். வடவேங்கடத்தை நினைவூட்டும் வகையில் வெங்கடரமண சுவாமி நின்ற கோலத்தில் எழுந்தருளி அருள்பாலித்து வருகிறார்.

## திருவிழாக்கள்

புரட்டாசி 5 சனிக்கிழமைகளிலும் திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. வைகுண்ட ஏகாதசி உற்சவம், ஸ்ரீராம நவமி உற்சவம், நவராத்திரி உற்சவம், மார்கழி மாதம் பஜனை நோன்பு, மாதாந்திர அமாவாசை, பௌர்ணமி, ஏகாதசி உற்சவம் மற்றும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் 11.30 மணி வரை

மாலை 5.00 மணிமுதல் 7.30 மணி வரை

## அமைவிடம்

தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து கிருஷ்ணகிரி செல்லும் சாலையில் 4 கி.மீ. தொலைவில் உள்ள பழைய தருமபுரியிலிருந்து 1 கி.மீ. தொலைவில் உள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்தில் பேருந்து வசதி உள்ளது. ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் விடுதி வசதி உள்ளது.




**தொடர்பு முகவரி**

தக்கார்/ செயல் அலுவலர்

**அருள்மிகு வெங்கடரமண சுவாமி திருக்கோயில்,**

பழைய தருமபுரி, தருமபுரி வட்டம் (ம) மாவட்டம். – 636 706.





## அருள்மிகு தர்மராஜர் திரௌபதியம்மன் திருக்கோயில்

பாலக்கோடு

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு தர்மராஜர் சுவாமி |
| இறைவி | : | அருள்தரும் திரௌபதி அம்மன் |
| தலவிருட்சம் | : | உச்சி மரம் |

### தலச்சிறப்பு

பாஞ்சாலி என்று அழைக்கப்பட்டு பஞ்ச பாண்டவர்களை மணந்து உத்தமப் பத்தினியாக விளங்கியவர் திரௌபதியம்மன். ஐவரை மணந்த போதிலும் தர்மம் தவறியதில்லை. திரௌபதியம்மன் பெயரில் எழுந்துள்ள இத்திருக்கோயிலில் தர்மராஜர் சன்னதி பிரதானமாகத் திகழ்கிறது.

### தனிச்சிறப்பு

500 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமையான

ஓலைச்சுவடிகள் இத்திருக்கோயிலுக்குள் உள்ளன. மகாபாரதக்கதைப் படித்தலும், அதனை மக்கள் கூடியிருந்து கேட்பதும், பாரதக்கதையை தெருக்கூத்து வடிவில் நடித்து காண்பதும் இத்திருக்கோயிலின் தனிச்சிறப்பாகும். மேலும் பக்தர்கள் கேட்கும் வரம் அளிப்பவராக தர்மராஜ சுவாமியும், திரௌபதியம்மனும் விளங்குகிறன்றனர்.

## திருவிழாக்கள்

பங்குனியில் திருத்தேரோட்டப் பெருவிழா தொடர்ந்து 15 நாட்கள் வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. கோகுலாஷ்டமி உற்சவம், வைகுண்ட ஏகாதசி உற்சவம், சித்திரை மாதப்பிறப்பு மற்றும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும்
இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 4.00 மணி முதல் 5.00 மணி வரை

## அமைவிடம்

பாலக்கோடு பேருந்து நிலையத்தின் அருகே இத்திருக்கோயில் அமைந்துள்ளது. பாலக்கோட்டிருலிந்து ஆட்டோ வசதி உள்ளது. நடந்தும் செல்லலாம். பாலக்கோட்டில் தங்கும் விடுதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு தர்மராஜர் திருக்கோயில்,**

பாலக்கோடு நகர் (ம) வட்டம், தருமபுரி மாவட்டம்.





## அருள்மிகு கன்னிகாபரமேசுவரி திருக்கோயில்

பாலக்கோடு

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு கன்னிகாபரமேசுவரி அம்மன் |

### தலச்சிறப்பு

இத்திருக்கோயில் சுமார் 75 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமையானத் திருக்கோயிலாகும். வைசியக் குலத்தவரின் திருமகளாக அன்னை பார்வதி பிறவியெடுக்க, அரசகுலத்து விஷ்ணுவர்தன் அவளை மணமுடிக்க விரும்பினான். வேறு குலத்தவருக்குப் பெண்ணை மணமுடிக்க மறுத்து, மன்னனின் விருப்பத்தை நிறைவேற்ற மறுத்த கன்னிகாபரமேசுவரியும் தீக்குண்டத்தில் புகுந்து ஆரிய வைசிய குலத்தவரின் தெய்வமனாள்.

## தனிச்சிறப்பு

திருமணத்தடை நீக்கம், மகப்பேறு வரமளித்தல் மற்றும் வளமான வாழ்க்கையை வாரி வழங்கும் தெய்வமாக அருள்மிகு கன்னிகாபரமேசுவரி அம்மன் திகழ்கிறார்.

## திருவிழாக்கள்

நவராத்திரி திருவிழா 10 நாட்கள் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. சித்திரை மாதப்பிறப்பு, நவராத்திரி உற்சவம், ஆடி மாத உற்சவம், மற்றும் வாராந்திர வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றன.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது.

காலை **6.00** மணி முதல் **12.00** மணி வரை

மாலை **5.00** மணி முதல் **8.00** மணி வரை

## அமைவிடம்

பாலக்கோடு பேருந்து நிலையத்தின் அருகே இத்திருக்கோயில் அமைந்துள்ளது. பாலக்கோட்டிலிருந்து ஆட்டோ வசதி உள்ளது. நடந்தும் செல்லலாம். பாலக்கோட்டில் தங்கும் விடுதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

தக்கார் / ஆய்வர்

**அருள்மிகு கன்னிகாபரமேசுவரி திருக்கோயில்,**

பாலக்கோடு வட்டம், தருமபுரி மாவட்டம். **636 808.**



# அருள்மிகு கரூர் மாரியம்மன் திருக்கோயில்

எச்சனஅள்ளி

| | |
|---|---|
| இறைவி | : அருள்மிகு கரூர் மாரியம்மன் |
| தலவிருட்சம் | : வேம்பு |

## தலச்சிறப்பு

பரம்பொருளைச் சிவம் என்று அழைத்தல் மரபு. அது சிவம், சக்தி என இரு கூறுகளை உடையது. தீயும் அதன் சூடும் இணைந்தே செயல்படும் தன்மையுடையது. நிலைத்திருப்பதைச் சிவம் எனவும், இயங்கும் தன்மையுடையதைச் சக்தி எனவும் கூறப்படுகிறது. இறைவனிடம் ஒன்றி அவனது திருக்கருணை வடிவாய் இருப்பவளே அன்னை ஆதிபராசக்தி அன்னையானவள். பலதோற்றங்களில் பல இடங்களில் தோன்றி பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறார். அவ்வகையில் இத்திருக்கோயில் பக்தர்களுக்குக் கண்பார்வை வழங்கும் கரூர் மாரியம்மனாக அன்னை எழுந்தருளி அருள்பாலித்து வருகிறார்.

## திருவிழாக்கள்

ஆடி மாதம் மாரியம்மன் திருவிழா வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. சித்திரை மாதபிறப்பு, நவராத்திரி உற்சவம், மாதாந்திர அமாவாசை மற்றும் வாராந்திர வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெற்று வருகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 3.00 மணி முதல் 6.00 மணி வரை

## அமைவிடம்

தருமபுரியிலிருந்து 28 கி.மீ. தொலைவிலும், பி.அக்ரஹாரத்திலிருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ள எச்சனஅள்ளி கிராமத்தில் திருக்கோயில் அமைந்துள்ளது. தருமபுரியிலிருந்து பேருந்து வசதி, ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் விடுதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்

**அருள்மிகு கரூர் மாரியம்மன் திருக்கோயில்,**

எச்சனஅள்ளி பென்னாகரம் வட்டம், தருமபுரி மாவட்டம்.–636 813.



### உடம்பில் பஞ்சபூத ஸ்தானங்கள்



பாதம் முதல் முழங்கால் வரையிலும் பூமி.

இடுப்பு வரையிலும் ஜலம்.

நாபி வரையிலும் அக்னி.

நாசி வரையிலும் வாயு.

சிரசு வரையிலும் ஆகாயம்.



## அருள்மிகு சஞ்சீவராய சுவாமி திருக்கோயில்

தித்தியோப்பனஅள்ளி

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு சஞ்சீராய சுவாமி |
| ஆகமம் | : | பாஞ்சராத்ரம் |

### புராணச்சிறப்பு

இராவணனோடு இராமபிரானின் படையினர் போரிட்ட போது லட்சுமணன் மூர்ச்சையாகி விழ நேரிட்டது. ஜாம்பவானின், அரிய யோசனையை ஏற்று ஆஞ்சநேயர், சஞ்சீவி மூலிகையைத் தேடி வடக்கே புறப்பட்டார். அந்த அரிய மூலிகையை இனம் கண்டுகொள்ள இயலாத நிலையில் அந்த மலையையேத் தூக்கி வந்து சேர்ந்து இலட்சுமணனைக் காப்பாற்றினார். அதனால் சஞ்சீவராயர் எனும் புகழையும் அடைந்தார்.

அனுமர் தூக்கி வந்த சஞ்சீவி மலையின் துகள் ஒன்று இப்பகுதியில் விழுந்து அந்த துகள் இங்கு சஞ்சீவி மலையாக மாறியது என்பர். இம்மலைப்பகுதியில் சித்தர்கள் பலர் நள்ளிரவில் உலாவுவதாகவும் திருக்கோயிலுக்கு வடமேற்கில் உள்ள பூதகூண்டு எனும் குகையில் அவர்கள் இருப்பதாகவும் கூறுவர்.

## தலச்சிறப்பு

தருமபுரிக்கு வடமேற்கே பாப்பாரப்பட்டிக்கு அருகே தரையிலிருந்து சுமார் 400 அடி உயரமுள்ள சஞ்சீவ மலையில் பசுமையான காடுகளின் நடுவே மலைபாதையுடன் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலில் அருள்மிகு சஞ்சீவிராயசுவாமி நின்ற கோலத்தில் புடைப்புச்சிற்பமாக எழுந்தருளியுள்ளார்.

## திருவிழாக்கள்

புரட்டாசி மாத சனிக்கிழமைகளில் சுவாமி மெரவனையுடன் திருவிழாவும், சித்ரா பௌர்ணமி விழாவும் வெகு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. அனுமர் ஜெயந்தி உற்சவம், கோகுலாஷ்டமி உற்சவம், ஸ்ரீ ராம நவமி உற்சவம், நவராத்திரி உற்சவம், ஆடி மாத உற்சவம், மாதாந்திர பௌர்ணமி உற்சவம் மற்றும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும் நடைபெற்று வருகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் உச்சிகால பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 6.00 மணி முதல் 11.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 7.00 மணி வரை

## அமைவிடம்



பாப்பாரப்பட்டியிலிருந்து 8 கி.மீ தொலைவில் தித்தியோப்பனஅள்ளி கிராம வனப்பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. பாப்பாரப்பட்டியிலிருந்து ஆட்டோ வசதி உள்ளது. பாப்பாரப்பட்டியில் தங்கும் விடுதி உள்ளது.

**தொடர்பு முகவரி**

செயல் அலுவலர்
**அருள்மிகு சஞ்சீவராய சுவாமி திருக்கோயில்,**
தித்தியோப்பனஅள்ளி, பென்னாகரம் வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 809.



## அருள்மிகு காட்டுமாரியம்மன் திருக்கோயில்

தீர்த்தாரஅள்ளி

| | | |
|---|---|---|
| இறைவி | : | அருள்மிகு காட்டுமாரியம்மன் |
| தல விருட்சம் | : | வேம்பு |

### புராணச்சிறப்பு

தீர்த்தாரஅள்ளி ஊரில் வாழ்ந்து வந்த மக்கள் தொமகுண்டு காட்டுப்பகுதியில் ஆடு, பசுக்கள் மேயச்செய்து வருவது வழக்கமாக இருந்து வந்த நிலையில், ஆடு மற்றும் பசுக்களை மேய்க்க வந்த சிறுவன் ஒருவன், மாலை நேரம் ஆரம்பித்ததும் வீட்டிற்குச் செல்ல வேகவேகமாக நடந்தான். அதுசமயம், மகனே சற்று நில், ஏன்? பயந்து வேகமாக செல்கின்றாய்? நான் இங்கு இருக்கும் வரை பயப்படத் தேவையில்லை, நான் உன்னை காத்தருள வந்த அம்மனாவேன் என்ற குரல் மட்டும் கேட்டு

அதிர்சியடைந்தானாம். அச்சிறுவன் மூலம் தகவல் அறிந்த ஊர் மக்கள் சிறுவனை அழைத்துச் சென்று பார்த்தபோது அவ்விடத்தில் அம்மன் சிறிய கல்வடிவத்தில் காட்சியளிப்பதை கண்டு அதிசயத்துப் போனார்கள். மேலும் அவ்விடத்தில் உடனடியாக சிறியதாகக் கோயில் கட்டி வழிபட்டு வர ஆரம்பித்தனர் என்பது வழிவழியாக அறியப்படுகிறது.

## தலச்சிறப்பு

இத்திருக்கோயிலானது "தொமகுண்டு" என்று அழைக்கப்படும் சிறிய காட்டுப்பகுதியில் மலை அடிவாரத்தில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலில் கிழக்கு நோக்கி அம்மன் அமர்ந்துள்ள காட்சி மிக அற்புதமாக உள்ளது. இத்திருக்கோயிலின் அருகாமையில் உள்ள காட்டுப்பகுதியில் வேப்பங்குழி என்னும் இடத்திலிருந்து மழைக்காலங்களில் அருவியாக நீர் கொட்டுவது குற்றால அருவிப்போல் கண்கொள்ளாக் காட்சியாக அமைந்துள்ளது.

## தனிச்சிறப்பு

இவ்வழியாகச் செல்லும் வாகனங்கள் அனைத்தும் இத்திருக்கோயிலில் நிறுத்தி சிறப்பு வாகனப் பூஜை செய்த பின்னரே தங்கள் பயணத்தைத் தொடங்குகின்றனர். மழையின்றி இருக்கும் போது மழை வேண்டி அம்மனுக்கு பூஜைகள் செய்வதால் அம்மனும் அதனை ஏற்று மழை பொழிவிக்கச் செய்து அருள்புரிவாள். அம்மை எனும் வெப்பு நோயைத் தீர்க்கும் அரிய சக்தி வாய்ந்த தெய்வமாக காட்டுமாரியம்மன் திகழ்வது தனிச்சிறப்பாகும்.

## திருவிழாக்கள்

ஆடி மாதத்தில் மாரியம்மன் திருவிழா மிகச்சிறப்பாக கொண்டாடப்படுகிறது. சித்திரை மாத உற்சவம், நவராத்திரி உற்சவம், ஆயுத பூஜை உற்சவம், மாதாந்திர அமாவாசை உற்சவம், வாராந்திர செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி – தினமும் ஒரு கால பூஜை நடைபெறுகிறது

காலை 7.00 மணி முதல் மாலை 6.00 மணி வரை

## அமைவிடம்

இத்திருக்கோயில் பாலக்கோட்டிலிருந்து பெல்ரம்பட்டி, திருமல்வாடி செல்லும் வழியில் 3 கி.மீ. தொலைவில் உள்ள தீர்த்தார அள்ளியில் அமைந்துள்ளது. பாலக்கோட்டிலிருந்து பேருந்து வசதி மற்றும் ஆட்டோ வசதி உள்ளது.



**தொடர்பு முகவரி**

பரம்பரை அறங்காவலர்

**அருள்மிகு காட்டுமாரியம்மன் திருக்கோயில்,**

பாலக்கோடு வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 808.



**பஞ்சாயதன பூஜா மூர்த்தங்கள்**



| | |
|---|---|
| பாணலிங்கம் | – சிவன் |
| ஸ்வர்ணரேகாசிலா | – அம்பிகை |
| சாளக்கிராமம் | – விஷ்ணு |
| ஸ்படிகம் | – சூரியன் |
| சோணபத்ரம் | – விநாயகர் |





# அருள்மிகு ஆஞ்சநேயர் சுவாமி திருக்கோயில்

தருமபுரி

| | | |
|---|---|---|
| இறைவன் | : | அருள்மிகு ஆஞ்சநேயர் |
| ஆகமம் | : | பாஞ்சராத்ரம் |

## தலச்சிறப்பு

அருள்மிகு சாலைவிநாயகர் திருக்கோயிலுக்கு அருகில் அமைந்துள்ள இத்திருக்கோயிலானது சாலைவிநாயகர் திருக்கோயிலுக்கு இணையான தொன்மையைக் கொண்டுள்ளது. இத்திருக்கோயிலில் அருள்மிகு ஆஞ்சநேயர் சுவாமி அபயம் அளிப்பவராகவே எழுந்தருளியுள்ளார்.

## தனிச்சிறப்பு

சித்தபிரமை, சனீசுவர பகவானால் பாதிப்புக்கு உள்ளாகி, கோசார ரீதியாக சனியினால் பாதிக்கப்பட்டவர்களும், ஆஞ்சநேயரை வழிபட்டு நிவாரணம் பெறுகிறார்கள்.

## திருவிழாக்கள்

அனுமர் ஜெயந்தி மற்றும் ஆடி 18 திருவிழா மிகச்சிறப்பாக நடைபெறுகிறது. புரட்டாசி சனிக்கிழமைகள், நவராத்திரி உற்சவம், மார்கழி மாத விடியற்காலை பூஜை, மாதாந்திர அமாவாசை, மற்றும் வாராந்திர சனிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது.

## பூஜை மற்றும் நடைதிறந்திருக்கும் நேரம்

காலசந்தி மற்றும் சாயரட்சை பூஜை என தினமும் இரண்டு கால பூஜை நடைபெறுகிறது

காலை 6.00 மணி முதல் 12.00 மணி வரை

மாலை 5.00 மணி முதல் 8.00 மணி வரை

## அமைவிடம்

இத்திருக்கோயில் தருமபுரியின் மையப்பகுதியில் அமைந்துள்ளது. தருமபுரி – சேலம் செல்லும் சாலையில் (பழைய சாலை) பழைய காவல் நிலையம் எதிரில் உள்ளது. தருமபுரி பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவில் உள்ளது. திருக்கோயிலுக்கு ஆட்டோ வசதி உள்ளது. தருமபுரியில் தங்கும் வசதி உள்ளது.




தொடர்பு முகவரி

தக்கார் / செயல் அலுவலர்

**அருள்மிகு ஆஞ்சநேயர் சுவாமி திருக்கோயில்,**

கடைவீதி, தருமபுரி வட்டம், தருமபுரி மாவட்டம். – 636 701.

# அருள்மிகு மல்லிகார்ஜுனசுவாமி திருக்கோயில்

கோட்டை, தருமபுரி



ஹொய்சால காலத் தொங்கும் தூண்



மேல் விதானத்தில் எண்திசைக் காவலர்கள்

# அருள்மிகு மல்லிகார்ஜுனசுவாமி திருக்கோயில்,

கோட்டை, தருமபுரி





ஹொய்சால, சாளுக்கியர் காலச் சிற்பக்கலைகள்

# அருள்மிகு காலபைரவர் சுவாமி திருக்கோயில்

அதியமான் கோட்டை, தருமபுரி







ஹொய்சால கால வரிச் சிற்பங்கள்

# அருள்மிகு காலபைரவர் சுவாமி திருக்கோயில்

அதியமான் கோட்டை, தருமபுரி



தீர்த்தங்கரர்
பார்சுவநாதர் சிற்பம்



ஹொய்சால கால
வரிசிற்பம்

# அருள்மிகு காசி விஸ்வநாதர் சுவாமி திருக்கோயில்

புலிக்கல்– பாலக்கோடு



திருநந்தித்தேவர்

# அருள்மிகு கல்யாணராமர் திருக்கோயில்

தென்கரைக்கோட்டை







இசைத்தூண்கள்

# அருள்மிகு சென்றாய சுவாமி திருக்கோயில்

அதியமான் கோட்டை, தருமபுரி









**ஹொய்சாலர் கால மூலிகை வண்ண ஓவியங்கள்**
**இராமாயண, மகாபாரதக் காட்சிகள்**

## தருமபுரி மாவட்டத்தில் பார்க்க வேண்டிய பிற சுற்றுலாத் தலங்கள்



**ஒகேனக்கல் நீர் வீழ்ச்சி,** (தருமபுரி – ஒகேனக்கல் 40 கி.மீ.)



**வத்தல்மலை,** (தருமபுரி – வத்தல்மலை 35 கி.மீ)




வள்ளல் அதியமான் கோட்டம் அதியமான் கோட்டை, தருமபுரி



அருள்மிகு தீர்த்தகிரீஸ்வரர் திருக்கோயில், தீர்த்தமலை



வாணியாறு நீர்தேக்கத்திட்டம், பாப்பிரெட்டிப்பட்டி
தருமபுரி – பாப்பிரெட்டிப்பட்டி 40 கி.மீ.




சுதந்திரப் போராட்டத் தியாகி சுப்ரமணிய சிவா
மணிமண்டபம், பாப்பாரப்பட்டி




# தமிழ்நாடு அரசு

## இந்து சமய அறநிலையத்துறை

### திருக்கோயில்களின் அன்னதானத் திட்டம்

சேலம் இணை ஆணையரின் மண்டலத்தில் தருமபுரி மாவட்டத்தில்
அன்னதானத் திட்டம் நடைபெறும் திருக்கோயில்கள்

1 அருள்மிகு சிவசுப்ரமணிய சுவாமி திருக்கோயில், குமாரசாமிப்பேட்டை, தருமபுரி

2 அருள்மிகு தீர்த்தகிரீஸ்வரர் திருக்கோயில், தீர்த்தமலை

3 அருள்மிகு சிங்காரத்தோப்பு முனீஸ்வரர் சுவாமி திருக்கோயில், நடுப்பட்டி

4 அருள்மிகு கொல்லாபுரியம்மன் திருக்கோயில், இருமத்தூர்

5 அருள்மிகு காலபைரவர் சுவாமி திருக்கோயில், அதியமான் கோட்டை, தருமபுரி

6 அருள்மிகு முத்தித்தராய சுவாமி திருக்கோயில், நெருப்பூர்

மேலே குறிப்பிட்டுள்ள திருக்கோயில்களில் பக்தர்கள் தாங்கள் குறிப்பிடும் தினத்தில் 50 நபர்களுக்கு அன்னதானம் செய்வதற்கு ₹ 1000/– செலுத்தினால் குறிப்பிட்ட அந்த தினத்தில் அன்னதானம் வழங்கப்படும்.

அன்னதான நன்கொடை செலுத்துபவர்கள் வருமானவரிச்சட்டம் 80G ன் கீழ் வருமான வரிவிலக்கு பெறலாம்.

**இணை ஆணையர்,**
**இந்து சமய அறநிலையத்துறை, சேலம் மண்டலம்.**